

அம்புலிமாமா மதிமுகம் : 58 ஜூலை : 2005 புன்னகை : 07



## பொருளடக்கம்



## சிறப்புப் படைப்பாக


















SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**

*Remittances in favour of Chandmama India Ltd.*
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
**No. 82, Defence Officers Colony**
**Ekkatuthangal,**
**Chennai - 600 097**
**E-mail :**
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900 /- இந்தியாவிற்குள் ரூ.144 /- **புக்போஸ்டில் உங்கள்** சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியாடரிலோ **சந்தமாமா இந்தியா** லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# குழந்தைகளை இயந்திரங்களாக ஆக்க வேண்டாம்

தற்போதைய ம த்திய அ ரசு ஆ ட்சிக்கு வ ந்து ஓ ர் ஆ ண்டு மு டிந்ததை யொட்டி, சமீபத்தில் ஒரு தொலைக் காட்சி நிகழ்ச்சியில் பள்ளியில் ப யிலும் குழந்தைகளிடம் ''நமது பாரத நாட்டின் பிரதம மந்திரி யார்? '' என்ற கேள்விக்கு, எந்தக் குழந்தையாலும் சரியான பதிலை அளிக்க முடியவில்லை.

காலஞ்சென்ற நமது பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேருவின் நினைவு தினத்தையொட்டி, மே மாதம் 27ந் தேதி நடந்த நிகழ்ச்சிகளின் போது, சில குழந்தைகளுக்கு அவருடைய பெயர் மட்டும் ஞாபகம் இருந்தது. வெள்ளித்திரையில் மின்னும் நட்சத்திர நடிகர்களின் பெயர்களும், விளையாட்டுத் துறையில் புகழ்பெற்ற வீரர்களின் பெயர்களும், எல்லாக் குழந்தைகளுக்குமே தெரிந்திருந்தது. இது எதை சுட்டிக் காட்டுகிறது?

தற்போது நடைமுறையில் இருந்து வரும் கல்வித் திட்டங்களே இதற்குக் காரணம் என்று கூறலாம். மிக அதிகமான விஷயங்களை அவர்களுடைய மூளைக்குள் திணிக்கப் படுவதால் முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டிய சில விஷயங்கள் கூட அவ ர்களுக்குத் தெரிவதில்லை.

கோடை விடுமுறை முடிந்து, பள்ளி மீண்டும் திறக்கும் காலம் நெருங்கி விட்டது. மீண்டும் பழைய முறையிலேயே பாடங்களை மட்டும் திணித்து அவர்களை உணர்ச்சியற்ற மனித இயந்திரங்களாக ஆக்க வேண்டாம். பாடங்களுக்கிடையே, மனித நேயத்தையும் ஊட்டி வளர்த்து, அவர்களை பொறுப்புள்ள, நாட்டுப் பற்றுள்ள எதிர்கால பிரஜைகளாக மாற்ற முயற்சிப்போம்!

ஆசிரியர் : **விஸ்வம்**







# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி (டிசம்பர்)

## தேர்ந்தெடுக்கப் பட்ட சிறந்த கதை



ஜகந்நாதர் நண்பர் மோகனை அழைத்தார். பேரப்பிள்ளைகளின் எதிர்காலம் எப்படி அமையும் என்று கேட்டார். ''கவலைப் படாதே ஜகந்நாதா! நான் கண்டு பிடித்துச் சொல்கிறேன்'' என்றார் மோகன்.

பேரப்பிள்ளைகளை அழைத்தார். ''குழந்தைகளே! கடவுள் உங்கள் முன் தோன்றி மகிழ்ச்சியான வாழ்க்கை வாழ்வதற்கு என்ன வரம் வேண்டும் என்று கேட்டால் என்ன பதில் கூறுவீர்கள்? உங்கள் பதில் எப்படி இருந்தாலும் சரி. தயங்காமல் கூறலாம். ஆனால் தனித்தனி அறைகளில் இருந்து யோசியுங்கள்!'' என்றார்.

மூத்தவனான பிரமநாயகத்தை வலது பக்க அறையில் வைத்தார்.

இளையவனான தெய்வநாயகத்தை இடது பக்க அறையில் இருக்கச் செய்தார். ஒருவர் பதில் அடுத்தவர் அறியாதபடி பார்த்துக் கொண்டார்.

சில நேரம் கழித்து மூத்தவன் அறைக்குச் சென்றார். ''மகிழ்ச்சியாக வாழ ஒரு வீடும், உயிர் பிழைக்க நிலமும் கடவுளிடம் கேட்பேன்! என்றான்.

இளையவன் அறைக்குள் சென்றார். ''மகிழ்ச்சியான வாழ்க்கை வாழ மன உறுதியும் உடல் நலமும் போதும். அதையே கடவுளிடம் கேட்பேன். சுனாமி அலையால் வீடு நிலம் வண்டி வாகனம் இழந்தவர்களிடம் மன உறுதி தானே மிஞ்சியது'' என்றான்.

பதில்களைக் கேட்ட மோகன் ஜகந்நாதரை அழைத்தார்! ''இவர்கள் பதில்களைக் கேட்டேன். மூத்தவனுக்கு உன் வீட்டையும் நிலத்தையும் கொடு. பிழைத்துக் கொள்வான். இளையவன் பற்றிக் கவலைப் படாதே. சமாளித்துக் கொள்வான்'' என்றார். வீடும் நிலமும் இருந்தால் பிழைக்கலாம் என்பது பிரமநாயகம் கூறிய பதில்.

உடல் நலமும் மன உறுதியும் இருந்தால் போதும் பிழைத்துக் கொள்ளலாம் என்பது தெய்வநாயகம் சொன்ன பதில் என்பதே மோகன் அறிவுரையின் உட்கருத்து.

**ஸ்ரீ ஷக்தி அபிராமி,** (9ஆம் வகுப்பு) த/பெ. தெ.பாலஇரமணி,
'பரணி இல்லம்' எண் 169/6, கோல்டன் ஜூபுளி காலனி,
அண்ணாநகர், சென்னை - 600 040.



# சிவப்பு ரோஜா

**சோ**ழநாட்டில் சோமாவரம் என்ற மிகச் செழிப்பான ஒரு கிராமம் இருந்தது. அந்தக் கிராமத்தில் கண்ணுக்கெட்டிய தூரம் வரை பச்சை பசேல் என்று வயல்கள் கண்களுக்குக் குளிர்ச்சியாகத் தோன்றின. கிராம மக்கள் மிகவும் ஒற்றுமையாகவும், நேர்மையுடனும் காலம் கழித்தனர். எந்த குறைபாடுகளும் இல்லாமல், ஒரு சிறப்பான கிராமமாக சோமாவரம் திகழ்ந்தது.

சோமாவரம் கிராமத்தில் அமைந்திருந்த சிவன் கோயில் மிகவும் புகழ் வாய்ந்ததாகத் திகழ்ந்தது. அந்தக் கோயிலைக் காண, ஏராளமான பக்தர்கள் அருகிலுள்ள கிராமங்களிலிருந்து வந்து கொண்டேயிருந்தனர். கிராமத்தின் புகழையும், கோயிலின் மகிமையையும் கேள்விப்பட்ட சோழ அரசர் அதன் காரணம் அறிய தன் மந்தரியுடன் ஒருநாள் மாறு வேடத்தில் அங்கு வந்தார்.

கிராமத்தில் ஒரு முக்கிய பிரமுகரின் வீட்டுடிற்குச் சென்ற மன்னரும் மந்திரியும் தங்களை சோதிட நிபுணர்களாக அறிமுகப் படுத்திக் கொண்டனர். ஆனால் அந்த பிரமுகர் மன்னரை நோக்கி, ''கனவான்களே! தாங்கள் இருவரையும் பார்த்தாலே மிகச் சிறந்த நிபுணர்கள் என்று தோன்றுகிறது. ஆனால் எனக்கு சோதிடத்தில் ஆர்வம் இல்லை. மனிதன் தனக்குத் தேவையானவற்றை, தன் உழைப்பின் மூலமே பெற்றுக் கொள்ள வேண்டும் என்று கருதுகிறவன் நான். சோதிடர் கூறும், வரப்போகும் அதிருஷ்டங்களை எண்ணிக் கொண்டு வாழ நான் தயாராயில்லை. இங்குள்ள மக்கள் அனைவருமே என்னைப் போலவே தான் இருப்பார்கள்'' என்றார்.

அவருடைய அறிவுப்பூர்வமான பேச்சைக் கேட்டு ஆச்சரியமடைந்த மன்னர், ''சிவபெருமான் அருளால்,

-மனோகரன்-



களை எங்கள் மனத்தில் பதிய வைத்தவர் அவரே! உங்களுடைய சோதிடத் திறமையை எவ்வாறு பயன்படுத்தலாம் என்று அவர் ஆலோசனை கூறுவார்'' என்றார்.

அதன்படியே மன்னரும், மந்திரியும் கமலநாதரை அடைந்தனர். அவர்களுடைய வேண்டுகோளைக் கேட்டபிறகு கமலநாதர், ''சோதிட சாஸ்திரம் மிகவும் சிறப்பு வாய்ந்தது. ஆனால் ஒரு தனி மனிதனின் வாழ்க்கையில் நிகழவிருக்கும் சம்பவங்களைப் பற்றி நீங்கள் ஆராய்ந்து கூறுவதால், நன்மைகளைக் காட்டிலும் தீமைகளே அதிகம் உண்டாகும். அதைக்காட்டிலும் நிகழப்போகும் இயற்கையின் இடையூறுகளான புயல், நிலநடுக்கம் ஆகியவைப்பற்றி நீங்கள் தகவல் தந்தால், அது நாட்டிற்கும், நாட்டு மக்களுக்கும் பெரிதும் பயன்படும்,'' என்றார்.

கமலநாதரின் அறிவுக்கூர்மையைக் கண்டு வியந்த மன்னர், அதன்பிறகு தான் யாரென்பதை அவருக்குத் தெரிவித்தார். மன்னரையும், மந்திரியையும் விழுந்து வணங்கினார் கமலநாதர். பிறகு கமலநாதரை நோக்கி மன்னர், ''கமலநாதரே! தங்களைப் போன்ற சான்றோர்களால் தான் ஒரு கிராமம் சிறப்படையும் என்பது தெளிவாகிறது. தங்களிடம் எங்கள் தலைநகரிலிருந்து அறிவிற் சிறந்த சில இளைஞர்களை நான் அனுப்புகிறேன். கிராமங்களின் முன்னேற்றத்திற்காகத் திட்டங்களை அவர்களுக்குக் கற்றுக் கொடுங்கள்.

இந்தக் கிராமத்திலுள்ள நீங்கள் சிறப்பாக இருக்கின்றீர்கள். இந்தப் பெருமை எல்லாம் இறைவன் தந்தது. அப்படியிருக்க, அருள் கூர்ந்து எங்களைப் போன்றோர்களை ஆதரிக்கக் கூடாதா?'' என்றார்.

அதற்கு பிரமுகர், ''நீங்கள் கூறுவதை ஒப்புக் கொள்கிறேன். நீர்வளமும், நிலவளமும் இறைவன் தந்ததுதான்! ஆனால் இவை இரண்டு மட்டும் இருந்தால் போதாது. நம்முடைய உழைப்பும் இருந்தால் தான், இவற்றைப் பயன்படுத்திக் கொள்ள முடியும். உழைப்பையே முக்கியமாகக் கருதும் எங்களுக்கு எதிர்காலத்தைப் பற்றி அறிய தேவை இல்லை. நீங்கள் கமலநாதரைச் சென்று பாருங்கள். பத்து ஆண்டுகளாக இத்தகைய உயரிய கருத்து



பிறகு அவர்கள் பல கிராமங்களுக்கும் சென்று, தங்கள் கருத்துகளைப் பரப்பி கிராமங்களின் முன்னேற்றத்திற்கு வழி வகுப்பார்கள்'' என்றார். கமல நாதரும் மகிழ்ச்சியுடன் இசைந்தார்.

அதன்படியே மன்னர் இருபது இளைஞர்களை கமலநாதரிடம் அனுப்ப, கமலநாதரும் அவர்களிடம் மக்களின் நல்வாழ்வுக்கான திட்டங் களைப் பற்றி அவர்களுக்கு விளக்கிக் கூறினார். பிறகு அவர்கள் பல கிராமங்களுக்குச் சென்று, கமல நாதரின் திட்டங்களை அமல் படுத்த முயன்றனர். ஆனால் ஓராண்டுக்குப் பிறகும், சோமாவரத்தைப் போல், அந்தக் கி ராமங்கள் மு ன்னேற்றம் அடையவில்லை. மன்னருக்கு அப்போது கமலநாதரின் மீது சந்தேகம் தே ான்ற ஆரம்பித்தது. ஆனால் மந்திரி, ''அரசே! கமல நாதரை வேறொரு கிராமத்தில் தங்கச் செய்து ப ார்க்கலாமே! ே சாமா வரத்தைப் போல் அந்தக் கிராமமும் முன்னேற்றம் அடைகிறதா என்பதை சோதித்து விடலாம்'' என்றார்.

உடனே மன்னரும் சோமா வரத்தை விடுத்து, பஞ்சம் தாண்டவ மாடிக் கொண்டிருந்த ராமாவரம் என்னும் கிராமத்துக்குச் செல்லுமாறு கமலநாதரைக் கட்டளையிட்டார். அதன்படியே கமலநாதரும் தன் மனைவி மீனாட்சி, புதல்வன் ராமன், புதல்வி கீதா ஆகியோருடன் ராமா வரத்திற்குச் சென்று குடியேறினார். ராமாவரத்து மக்கள் அவர் வசிக்க ஒரு பாழடைந்த வீட்டைக் கொடுத்தனர். பஞ்சத்தின் கொடூரத்தில் சிக்கி இருந்த ராமாவரம் மக்களின் முன்னேற்றத் திற்கான முயற்சிகளில் ஈடுபட்டார்.

முதலில் கிராமத்தை நன்கு சுற்றிப் பார்த்து, கி ராமமக்கள் ஒ வ்வொரு வருடனும் கலந்து உரையாடி, அவர் களுடைய துன்பங்களின் மூல காரணத்தை அறிய முயன்றார். பிறகு ஒவ்வொருவருக்கும் வாழ்க்கை எனும் படகை சாமர்த்தியமாகச் செலுத்தும் வழிமுறைகளை விளக்கினார். எங்கு நிலத்தைத் தோண்டினால் நீர் ஊற்று வரும் என்ற விஷயத்தில் பலருக்கு உதவி செய்தார். பஞ்ச காலத்தில் எந்த நிலத்தில் எத்தகைய பயிரிட்டால் குறைந்த நீர்ப்பாசன வசதியைப் பற்றி ஒவ்வொருவருக்கும் எடுத்து உரைத்தார். விவசாயம் இல்லாத



காலங்களில், நகரங்களுக்குச் சென்று எந்தெந்தத் தொழில்கள் செய்து பொருள் ஈட்டலாம் என்பது பற்றிய அறிவுரை தந்தார். இவ்வாறாக தனது அறிவுப்பூர்வமான உத்திகளாலும், சுயநலமற்ற முயற்சிகளாலும், ஆறே மாதங்களில் அந்தக் கிராமத்தின் தோற்றத்தையே மாற்றி விட்டார். இதற்கெல்லாம் மூலக்காரணமா இருந்த கமலநாதருக்குத் தங்கள் நன்றியினைத் தெரிவிக்க கிராமத்தினர் ஆசைப்பட்டனர். ஆனால் அவர்களிட மிருந்து எதையும் பரிசாகப் பெற கமலநாதர் மறுத்து விட்டார்.

கமலநாதரின் மனைவியை அணுகிய கிராமத்தினர், ''அம்மா! நீங்கள் வந்த பிறகு தான் இந்தக் கிராமத்திற்கு லட்சுமிகடாட்சம் வந்தது. உங்களுக்கு ஏதாவது பரிசாகக் கொடுத்தால்தான், நாங்கள் திருப்தி அடைவோம்'' என்றனர். கமலநாதரின் மனைவி மீனாட்சி சற்று யோசித்து விட்டு, ''வறண்ட பாலை வனம் போல் காட்சியளித்த எங்கள் தோட்டத்தில் இன்று பல பசுஞ் செடிகொடிகள் அழகாகக் காட்சி அளிக்கின்றன. ஆனால் ரோஜாச் செடி ஒன்று எங்கள் தோட்டத்தில் இல்லாதது ஒரு குறையாகத் தோன்றுகிறது. நீங்கள் எனக்கு பரிசளிக்க விரும்பினால், சிவப்பு ரோஜாக்கள் தரும் ஒரு ரோஜாச் செடியை எனக்கு அன்பளிப்பாகக் கொடுங்கள்'' என்றாள். அப்போது நாட்டில் ரோஜாச் செடி மிகவும் அபூர்வம் என்பதால், அதைத் தருவிப்பதில் கிராமத்தினர் பல முயற்சிகள் எடுத்துக் கொண்டனர்.

இதற்குள் ராமாவரத்தில் ஏற்பட்ட முன்னேற்றத்தைக் கண்டு மகிழ்ந்த மன்னர் அதற்குக் காரணம் கமலநாதரே என்று அறிந்தார். இத்தகைய திறமைசாலியான கமல நாதரை வேறு ஒரு கிராமத்திற்கு அனுப்பி, அந்தக் கிராமத்திலும் முன்னேற்றம் காண மன்னர் விழைந் தார். இதையறிந்த கிராமத்துப் பிரமுகர்கள் மன்னரிடம் சென்று, ''பெருமானே! கமலநாதரின் மனைவி மீனாட்சி ஒரு ரோஜாச் செடியை தனது தோட்டத்தில் பயிரிட ஆசை கொண்டுள்ளார். அவரது ஆசை நிறைவேறும் வரை, அவர்கள் எங்கள் கிராமத்திலேயே இருக்கட்டும்'' என்று வேண்டினர். மன்னரும் அதற்கு சம்மதித்தார்.

ஆனால் ஆறு மாதங்கள் கழிந்ததும், கிராமத்தினர் ரோஜாச் செடியைத் தேடுவதில் முயற்சிகள் எடுக்காததால் மந்திரியின் ஆலோசனையின் படி மன்னர் ஒரு ரோஜாச் செடியை எடுத்துக் கொண்டு ராமாவரம் சென்றனர்.

மீனாட்சி மிகுந்த மகிழ்ச்சியுடன் மன்னர் அளித்த ரோஜாச் செடியைப் பெற்றுக் கொண்டாள். உடனே மன்னர் கமலநாதரிடம், ''உங்கள் மனைவியின் விருப்பம் நிறைவேறி விட்டது. இனி நீங்கள் வேறு கிராமம் செல்லலாம் அல்லவா?'' என்றார்.

உடனே மீனாட்சி, ''மன்னிக்கவும் பெருமானே! இந்தச் செடியை நட்டு, அதில் ஒரு பூவாவது தோன்றும்வரை எங்களை இந்தக் கிராமத்திலேயே இருக்க அனுமதியுங்கள்'' என்றாள். ''ஏன்? இதை எடுத்துக் கொண்டு நீங்கள் வேறு கிராமத்திற்குச் சென்று அங்கே நடலாமே!'' என்றார்.

''மன்னியுங்கள் மகாராஜா! ரோஜாச் செடியை நான் வேண்டியது என்னுடைய வீட்டுத் தோட்டத்திற்காக! இப்போது இந்த ராமாவரம் எனது கிராமம்! இந்த வீடை என் வீடாகவும், தோட்டத்தை என் சொந்தத் தோட்டமாகவும் கருதுகிறேன்'' என்றாள்.

''அம்மா! இப்போது தான் எனக்கு ஒரு உண்மை புரிகிறது. நீங்களும், உங்கள் கணவரும் எந்த இடத்தில் இருக்கிறீர்களோ, அதைப் பிறந்த மண் போல் போற்றி சீராட்டுகிறீர்கள். அங்குள்ள மக்களை உங்களுடையவர்களாகவே எண்ணுகிறீர்கள். அதனால்தான் நீங்கள் இருக்கும் இடமெல்லாம், செல்லும் இடமெல்லாம் செழிக்கிறது. உங்களுக்கு இந்த நாடே கடமைப் பட்டுள்ளது. இனி இந்த நாட்டிலுள்ள கிராமங்கள் எல்லாம் உங்களுடைய கிராமம் நாட்டு மக்கள் எல்லாரும் உங்களுடையவர்கள். உங்கள் விருப்பப்படி நீங்கள் எங்கு வேண்டுமென்றாலும் செல்லுங்கள். வேண்டுமானாலும் தங்குங்கள். நன்றி, வணக்கம்!'' என்று கூறி மன்னர் விடை பெற்றார்.



# சொர்க்கமும் நரகமும்

ஓர் இளந்துறவி கோயிலுக்கு முன்னாலிருந்த மண்டபத்தில் அமர்ந்து தியானம் செய்து கொண்டிருந்தார். அப்போது அந்த நாட்டு சேனாதிபதி அந்தப் பக்கமாகச் சென்று கொண்டிருந்தான். துறவியைக் கண்டதும் குதிரையிலிருந்து இறங்கி அவர் முன் சென்று நின்றான். கண்களை விழித்துப் பார்த்த துறவிக்கு வினயமாக வணக்கம் தெரிவித்து விட்டு, அவரை நோக்கி, ''சுவாமி! பல நாள்களாக எனக்கு ஒரு சந்தேகம்....'' என்றான்.

துறவி புன்னகையுடன், ''சொல்!'' என்றார்.

''சொர்க்கம், நரகம் என்றெல்லாம் சொல்கிறார்களே! அவை உண்மையிலேயே இருக்கின்றனவா?'' என்று சேனாதிபதி கேட்டான்.

''நீ யார்?'' என்று துறவி கேட்டார்.

''நான் இந்த நாட்டு சேனாதிபதி!'' என்று அவன் கூறினான். ''உன்னைப் போன்ற முட்டாளை யார் சேனாதிபதி ஆக்கினார்கள்?'' என்று துறவி கேட்டதும் உடனே அவன் கோபத்துடன் வாளை உறையிலிருந்து உருவினான்.

''ஆகா! இப்போது நரகத்தின் கதவுகள் திறக்கின்றன, பார்த்தாயா?'' என்று துறவி கூறியதும், தன் செய்கையை எண்ணி வெட்கிய சேனாதிபதி வாளை மீண்டும் உறையிலிட்டு, ''என்னை மன்னித்து விடுங்கள் சுவாமி!'' என்றான்.

''பார்த்தாயா! இப்போது சொர்க்கத்தின் கதவுகள் திறக்கின்றன'' என்றார் துறவி. தொடர்ந்து, ''மனிதனுடைய காம, குரோத, மத, லோபங்கள் ஒருவனை நரகத்திற்கு இட்டுச் செல்கின்றன. அன்பு, கருணை, பொறுமை, இனிமை ஆகிய நற்குணங்கள் சொர்க்கத்தின் வாயிலைத் திறக் கின்றன. சொர்க்கமும், நரகமும் தனி யாக எங்குமில்லை. நம்முடைய இதயங்களில்தான் உள்ளது'' என்றார்.

''புரிந்தது சுவாமி! வணக்கம்!'' என்று கூறிவிட்டு, சேனாதிபதி குதிரையில் ஏறி மீண்டும் புறப்பட்டான்.





# மாய மந்திரவாதி

# 20

*(மந்திரக்கோலை தன் வசம் பெற்ற பைரவ குருவும் அவருடைய சீடர்களும் அதன் சக்தியை சோதிக்க நிலத்தில் அதைத் தட்ட, உடனே ஒரு சுரங்கமும், படிக்கட்டுகளும் தோன்றின. அரண்மனைக் கஜானாவை அடையும் வழி அதுதான் என்று எண்ணிய பைரவ குருவும் சீடர்களும் சுரங்கத்தினுள் இறங்கத் தொடங்கினர். அப்போது வெளியே, மாயக்கரடி தங்கள் முன் திடீரெனத் தோன்றிய வேடனுடன் சண்டையிடப் பாய்ந்து சென்றது. பிறகு...)*

**மா**யக்கரடியின் பயங்கரத் தோற்றத்தையும் அதன் கையிலிருந்த கோடரியையும் கண்டு, மரத்திலிருந்து குதித்த வேடன் பயந்து போனான். உடனே கரடியை வணங்கி, ''கரடியாரே! இந்தக் காட்டில் கடந்த ஒரு வாரமாக சில விசித்திர மனிதர்களையும் ஒரு ராட்சசனையும் அடிக்கடிப் பார்க்கிறேன். ஆனால் நீங்கள் குறிப்பிடும் மாயக்குரங்கை நான் இதுவரை பார்த்ததில்லை. ஆனால் சடைமுடிகளுடன் சிவப்பு உடை அணிந்த ஒரு மந்திர வாதி, ''என் சீடனே! மாயக்குரங்கே! எங்கே இருக்கிறாய்?'' என்று கத்திக் கொண்டு இருந்ததைப் பார்த்தேன்'' என்றான்.

வேடனுடைய வார்த்தைகளைக் கேட்ட கரடிக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. உடனே கோடரியை இறக்கி வைத்துவிட்டு, ''வேடனே! உன்னிடமிருந்து பல ஆச்சரியமான விஷயங்களை நான் கேள்விப் படுகிறேன். நீ



பயப்படவேண்டாம்! உன்னை நான் ஒன்றும் செய்யமாட்டேன்!'' என்றது. உடனிருந்த காட்டுவாசி கரடியை நோக்கி, ''கரடியாரே! இந்த வேடன் சொல்வது எவ்வளவு தூரம் உண்மை? ஏற்கெனவே நம்முடன் ஒரு மந்திர வாதியும், ராட்சசன் உக்கிரதண்டனும் இருக்க, இவன் வேறு யாரோ ஒரு மந்திரவாதியையும், ராட்சசனையும் பார்த்ததாகக் கூறுகிறானே!'' என்றான்.

''எனக்கும் அது விளங்கவில்லை! ஒருவேளை நமது மந்திரவாதியைத் தேடி மற்றொரு மந்திரவாதி வந்திருக் கிறானோ, என்னவோ! அதிருக் கட்டும் வேடனே! நீ யாரோ சுரங்கத் திற்குள் செல்வதைப் பார்த்தாகச் சொன்னாயே, அதை விளக்கிச் சொல்!'' என்றது. உடனே அந்த வேடன் கரடியாரை சுரங்கத்தின் அருகே அழைத்துச் சென்று காட்டினான். மந்திரக் கோலால் பைரவ குரு தரையைத் தட்டியதும், பூமி பிளந்து சுரங்கம் தோன்றி யதையும் விவரித்தான். அதைப் பற்றி உடனே தன்னுடைய மந்திர வாதிக்கும் காளிவர்மனுக்கும் தெரிவிக்க வேண்டுமென கரடி நினைத்த சமயம், காளிவர்மனே அந்த இடத்திற்கு வந்து விட்டான். ''கரடியே! கூடாரம் அமைக்க இது நல்ல இடம் என்று தோன்றுகிறது'' என்றான் காளிவர்மன்.

உடனே கரடி, ''காளிவர்மரே! அதைப்பற்றி பிறகு பேசுவோம்! அதற்குமுன் இந்த வேடன் கூறும் அதிசயமான விஷயங்களைக் கொஞ்சம் கேளுங்கள்!'' என்றது.

நடந்த நிகழ்ச்சிகளை அந்த வேடன் மீண்டும் காளிவர்மனுக்கு எடுத்துரைத்தான். உடனே காளி வர்மன் விரைந்து சுரங்கத்தினருகே சென்று உள்ளே எட்டிப் பார்த்ததில், தொலைவில் செல்லும் மூன்று உருவங்கள் தெரிந்தன. உடனே கரடியை நோக்கி, ''கரடியாரே! இந்த வேடன் சுரங்கத்தின் அருகே காவலாக இருக்கட்டும். நீ உடன் சென்று நமது மந்திரவாதியிடம் நடந்ததைக் கூறு! அதற்குள் நான் அந்த மூவரையும் பின் தொடர்ந்து சென்று அவர்களிட மிருந்து மந்திரக்கோலைப் பறிக்க முயற்சி செய்கிறேன்!'' என்றான்.

''ஆகட்டும், அதன் படியே செய்கிறேன்!'' என்ற கரடி தொடர்ந்து, ''காளிவர்மரே! நீங்கள் எச்சரிக்கை யாக இருங்கள்! அவர்களிடம் நமது மந்திரவாதியின் சக்தி வாய்ந்த

மந்திரக்கோல் இருக்கிறது. ஆகவே உங்களுக்கு அபாயம் நேராதவாறு ஜாக்கிரதையாக இருங்கள்!'' என்றது.

உடனே காளிவர்மன் வாளை உறையிலிருந்து உருவிக் கொண்டே, ''கரடியாரே! என்னுடைய வாளின் சக்தி மந்திரக்கோலுக்குச் சற்றும் குறைந்தது அல்ல! அத்தகைய வாள் என்னிடம் இருக்கையில் எனக்குக் கவலையில்லை,'' என்றான்.

அப்போது கரடியுடன் இருந்த காட்டு வாசி வேடனை அணுகி, ''நீ ஒரு வேடன், நான் ஒரு காட்டுவாசி! நாமிருவரும் ஒரே இனம். நாம் இருவரும் இனி சேர்ந்து செயற் படுவோம்! இப்போது ஆட்சி புரியும் ஜிதகேதுவின் ஆயுள் முடியும் காலம் நெருங்கி விட்டது. நாம் எதிர் அணியில் சேர்ந்து செயற்படுவோம். நமது அணி வெற்றி பெற்றபின், நமக்கு அரண்மனையில் நல்ல பதவி கிடைக்கும்,'' என்றான்.

ஆவலுடன் காட்டுவாசியை நோக்கிய வேடன், ''சகோதரனே! நீ சொல்வதெல்லாம் கேட்பதற்கு நன்றாக உள்ளது. தீயவனான ஜிதகேதுவை முறியடிக்கக் கூடிய அந்த சூரர் யார்?'' என்று கேட்டான்.

''அதோ பார்!'' என்று சுரங்கத் தினுள் சென்று கொண்டிருந்த காளி வர்மனைக் காட்டிய காட்டு வாசி, ''அவர்தான் காளிவர்மர்! அவரை ஜிதகேது அவமானம் செய்தது மட்டு மின்றி அவரைக் கொன்று விடவும் கட்டளையிட்டார். அன்று முதல் காளிவர்மர் ஜிதகேதுவைப் பழி



வாங்கத் துடித்துக் கொண்டிருக் கிறார்'' என்றான்.

''உன் முயற்சியில் நானும் உனக்குத் துணையாக இருப்பேன்!'' என்று கூறி வேடன் காட்டுவாசியைத் தழுவிக் கொண்டான்.

சுரங்கத்தினுள் விரைந்து சென்ற காளிவர்மன், முழங்காலளவு தண்ணீரைத் தாண்டி சென்ற பிறகு, தொலைவில் சென்று கொண்டிருந்த மூவரையும் நோக்கி ''நில்லுங்கள்!'' என்று கத்தினான். உடனே பைரவ குரு திரும்பிப் பார்த்தார். உடனிருந்த சீடர்கள் திகைத்துப் போயினர். சிறிய சீடர், ''குருவே! கஜானனாவைக் காவல் காப்பவன் நம்மைப் பார்த்து விட்டான்!'' என்று பயத்தில் குழறி னான். காளிவர்மனை உற்று நோக்கிய பைரவ குரு, ''சீடர்களே! இவன் ஒரு சாதாரண மனிதன்தான்! நான் பயந்தது போல் ஒரு யட்சன் அல்ல! இவன்



அருகில் வந்தால், இந்த மந்திரக் கோலின் உதவி கொண்டு இவனை மேலுலகம் அனுப்புவோம்!'' என்று சமாதானப்படுத்தினார். ஒரே எட்டில் அவர்களை அடைந்த காளிவர்மன், தன் உருவிய வாளை நீட்டி, ''இதோ இந்த வாளைப் பார்த்தீர்களா? உங்களிடமுள்ள மந்திரக்கோலை விட ஆயிரம் மடங்கு சக்தி வாய்ந்தது! ஒரே வீச்சில் உங்கள் மூவரின் தலைகளும் மண்ணில் உருளப் போகின்றன! மரியாதையாக அந்த மந்திரக்கோலை கொடுத்து விடுங்கள்!'' என்று எச்சரித்தான்.

வாளைக் கண்டதுமே அஞ்சி நடுங்கிய சீடர்கள், ''குருவே! பேசாமல் மந்திரக்கோலைக் கொடுத்து விடுங்கள்,'' என்று வேண்டினர். ஆனால் குரு மந்திரக் கோலைத் தன் தலைக்கு மேல் உயர்த்தி காளி வர்மனை நோக்கி ஏதோ மந்திரத்தை உச்சரிக்கத் தொடங்கினார். அடுத்த கணமே, காளிவர்மனின் வாளின் முனை பைரவ குருவின் மார்பினைத் தொட்டது. ''அற்ப பதரே! அந்த மந்திரக்கோலின் எஜமான் நான்! நீ இப்போது அதைத் தராவிடில், இந்த வாள் உன் இதயத்தை கிழித்து விடும்!'' என்ற பயமுறுத்தினான்.

அப்போதும் மந்திரக்கோலைக் கொடுக்காமல் பைரவ குரு நிற்க, சீடர்கள் இருவரும், ''குருவே! தயவு செய்து அதை அவரிடம் தந்து விடுங்கள்!'' என்று மன்றாடினர்.

''சீடர்களே, நீங்கள் சொல்வதைக் கேட்கிறேன்!'' என்ற பைரவ குரு, ஏதோ பெருந்தன்மையுடன் தானம் செய்பவர் போல் பாசாங்கு டன், ''வீரனே! உன்னுடைய தைரியத்தை மெச்சுகிறேன். எடுத்துக் கொள் இந்த மந்திரக்கோலை! இதை ஜிதகேது ராஜாவிடம் கொடுத்தால், அவர் தன் மகளை உனக்கு மணம் செய்து வைப்பார். நீ அரசகுமாரியையும் பாதி ராஜ்ஜியத்தையும் பெற்று நீடுழி வாழ்வாய்!'' என்று சொல்லி மந்திரக் கோலை காளிவர்மனிடம் தந்து விட்டார். பிறகு மெதுவாக அவர் ''வீரனே! நீ விரும்பியபடி மந்திரக் கோலை உனக்குத் தந்து விட்டேன். அதற்கு பிரதியாக கஜானாவிலிருந்து கொஞ்சம் பொன்னும் பொருளும் நாங்கள் எடுத்துக் கொள்ள அனுமதிப் பாயா?'' என்று வேண்டினார்.

அவருடைய வேண்டுகோளைக் கேட்டு முதலில் சிரிப்பு வந்தாலும்,

பிறகு காளிவர்மனுக்கு ஒரு யோசனை தோன்றியது. அதன்படி, ''இந்த சுரங்கத்தின் வழியாகச் சென்றால் அரண்மனைக் கஜானாவை அடையலாம் என்பது உங்கள் எண்ணம் போலும்! உங்கள் ஆசையைக் கெடுக்க நான் விரும்ப வில்லை. என்னுடன் வாருங்கள்! ஏதாவது பொன், பொருள் கிடைத் தால், நீங்கள் தாராளமாக அவற்றை எடுத்துச் செல்லலாம்!'' என்றான்.

அதைக் கேட்டதும் மிகவும் மகிழ்ச்சியடைந்த மூவரும், ''ஆகா! நீங்கள் கிடைத்தது எங்கள் பாக்கியம். உங்கள் பின்னே நாங்கள் வழி நடப்போம்!'' என்றனர்.

பிறகு நால்வரும் முன்னேறிச் சென்றனர். ஓரிடத்தில் சுரங்கப்பாதை முடிவடைந்தது. பாதையில் ஒரு பெரிய பாறை மேற்கொண்டு செல்ல விடாமல் வழியை மறைத்துக் கொண்டிருந்தது. அப்போது காளி வர்மன் மற்றவர்களை நோக்கி, ''இந்தப் பாறையை நாம் அனை வரும் சேர்ந்து நகர்த்தினால், மேற்கொண்டு செல்ல முடியும்!'' என்றான். அதன்படியே நால்வரும் முயன்று பாறையை அப்புறப் படுத்தினர். என்ன ஆச்சரியம்! எதிரே அரண்மனை நந்தவனம் காட்சி அளித்தது. அனைவரும் சுரங்கத்தில் இருந்து வெளியே வந்து ஜிதகேதுவின் நந்தவனத்தை அடைந்தனர்.

''அடடா! கடைசியில் இந்த இடத்திற்கா வந்து சேர்ந்தோம்!'' என்று மூவரும் சலித்துக் கொள்ள,



காளிவர்மன் ''உஷ்ஷ்! சத்தம் செய்யா தீர்கள்!'' என்று எச்சரித்தான். ''நாம் இப்போது வந்திருப்பது அரண்மனை நந்தவனம். அன்னியர்கள் வரக்கூடாத இடம் இது. இங்கே யாராவது நம்மைப் பிடித்து விட்டால், நமக்கு மரண தண்டனை கிடைக்கும். ஆனால் எனக்கு உயிரின் மீது ஆசையில்லை. நீங்கள் எப்படி? '' உன்றான்.

''ஐயோ! எங்களுக்கு உயி ரின் மீது அபார ஆசை! நாங்கள் தப்பித்துக் கொண்டு ஓடி விடுகிறோம்!'' என்றனர் மற்ற மூவரும். அப்போது திடீரென ஜிதகேது ராஜாவும், மாயக்குரங்கும் அங்கு வர, அவர்கள் நிலைமை தர்ம சங்கடமாகி விட்டது. நால்வரும் செடிகளுக்குப் பின்னால் ஒளிந்து கொண்டனர். காளிவர்மன் ரகசியமாக, ''நீங்கள் யாராவது ராஜாவிடம் பிடிபட நேரிட்டால்,

காணாமற் போன மந்திரக்கோலை நகரத்தில் ஒரு வியாபாரியிடம் பார்த்தோம். அதைப் பற்றித் தெரிவிக்க வந்தோம் என்று ஏதாவது பொய் சொல்லி விடுங்கள். பிறகு பார்த்துக் கொள்ளலாம்'' என்றான்.

காளிவர்மன் இவ்வாறு அவர்களுக்கு ஆலோசனை கூறிக் கொண்டு இருக்கையில், தொலைவில் எங்கிருந்தோ சங்கு ஒன்று ஒலிக்கக் கேட்டார்கள். அந்த சங்கொலி கேட்ட மாத்திரத்தில், மாயக்குரங்கு ஒரே தாவாகத் தாவி ஒரு மரத்தின் மீது ஏறியது. ''குருதேவா! தாங்கள் எங்கிருக்கிறீர்கள்? ே காட்டைக்கு வெளியிலிருந்து சங்கொலி எழுப்புகிறீர்களா அல்லது இங்குதான் எங்காவது இருக்கிறீர்களா?'' என்று கூச்சலிட்டது.

சிறிது நேரத்தில் சங்கொலி நின்று விட்டது. மரத்தின் உச்சியில் அமர்ந்து கொண்டு நாற்புறமும் சுற்றிப்பார்த்த மாயக்குரங்கின் கண்களுக்கு யாரும் தென்படவில்லை. மரத்திலிருந்து குரங்கு கீழே குதிக்கவிருந்த சமயம், அதன் கண்களில் செடிகளின் பின்னே ஒளிந்திருந்த பைரவ குருவும், சீடர்களும் தென்பட்டனர். உடனே கூக்குரலிட்டுக் கொண்டே கீழே குதித்த குரங்கு ஜிதகேதுவை நோக்கி, ''மகாராஜா! இது உங்கள் நந்தவனமா அல்லது ஆண்டிப் பண்டாரங்களின் சந்தை மடமா? இந்த பண்டாரங்கள் எவ்வாறு தங்கள் நந்தவனத்திற்குள் நுழைந்தனர்? இவர்களைக் கைது செய்யுங்கள்,'' என்று கத்தியது.

ஜிதகேது உடனே தன் காவலர்களைக் கூப்பிட்டு, உடனே பைரவ குருவையும் சீடர்களையும் கைது செய்ய உத்தரவிட்டான். பிறகு அவர்களை நோக்கி, ''யார் நீங்கள்? யாருடைய அனுமதியின் பேரில் இங்கே நுழைந்தீர்கள்? '' என்று கோபத்துடன் கேட்டான்.

உடனே பைரவ குரு தன் இரு கைகளையும் உயர்த்தி ராஜாவைக் கும்பிட்டு, ''ராஜா! மகாராஜா! மந்திரக்கோல்... சியாம குப்தன்! மந்திரக்கோல்... சியாமகுப்தன்!'' என்று உளறிக் கொட்டினார்.





நவீன வேதாளக் கதை

# இளவரசனின் தீர்மானம்

**த**ன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்திலேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழேயிறங்கி அதைத் தூக்கிக் கொண்டு மயானத்தை நோக்கிச் செல்லுகையில், அதனுள் இருந்த வேதாளம் சிரித்துக் கொண்டே, ''மன்னா, நீ கட்டளையிட்டால், ஓடிவர பல்லாயிரக் கணக்கான வீரர்கள் உள்ளனர். சர்வவல்லமை பொருந்திய மன்னனான நீ நினைத்தால் எதையும் அடையலாம். ஆனால் அத்தகைய பதவியில் இருந்தும், ராஜபோகத்தைத் துறந்து இந்த மயானத்தில் வீணாக அலைந்து திரிகிறாய். உன்னைப்



போன்ற சில அரசர்கள் மோக வலையில் விழுந்து, தன் நிலைகெட்டு வாழ்ந்திருக்கிறார்கள். அவ்வாறு மோக வலையில் வீழ்ந்து அவதிப் பட்ட தினகரன் எனும் இளவரசனின் கதையை உனக்குக் கூறுகிறேன், கேள்!'' என்றது.

சஞ்சீவபுரி ராஜ்ஜியத்தை ஆண்டு வந்த கமலபத்ரன் என்னும் மன்னருக்கு, தினகரன் என்று ஒரு மகன் இருந்தான். ஒரே மகனான அவனை, கல்வி கேள்விகளில் வல்லவனாகவும், போர்க்கலைகளில் ஒப்பற்றவனாவும் ஆக்கி, மிகவும் பெருமைப்பட்டுக் கொண்டிருந்த மன்னரின் அவைக்கு, ஒருநாள் பக்கத்து ராஜ்ஜியமான உஷாபுரியில் இருந்து ஒரு தூதுவன் வந்தான். அவன் மன்னர் கமலபத்ரனை வணங்கி, ''அரசே! எங்கள் மன்னரின் செல்வப் புதல்வி மதூலிகா திருமணப் பருவத்தை எய்தியுள்ளாள். அவளை உங்கள் குமாரனுக்கு மணம் முடிக்க வேண்டுமென்பது எங்கள் மன்னரின் அவா. இளவரசியின் ஓவியமும், அவளுடைய ஜாதகமும் கொண்டு வந்திருக்கிறேன். அவற்றைப் பார்வை இட்டபின் தங்களுடைய விருப்பத்தைத் தெரிவித்தால், நன்றியுடையவனாக இருப்பேன்,'' என்று இளவரசியின் ஓவியத்தையும், ஜாதகத்தையும் மன்னரிடம் தந்தான்.

இளவரசியின் ஓவியத்தைக் கண்ட மன்னர் பிரமித்துப் போனார். ஓவியத்தில் மிக அழகாகத் திகழ்ந்த மதூலிகாவைக் கண்டு மெய்மறந்து போனார். பிறகு ஓவியத்தை இளவரசனிடம் கொடுத்து விட்டு ஜாதகத்தை ஆஸ்தான சோதிடரிடம் தந்தார். வைத்த கண் வாங்காமல் ஓவியத்தை உற்றுப் பார்த்துக் கொண்டு அதில் மிகவும் லயித்துப் போன தினகரன், சோதிடரின் குரல் கேட்டு நிமிர்ந்தான்.

''மன்னிக்க வேண்டும் மகாராஜா!'' என்று ஆரம்பித்த சோதிடர் தொடர்ந்து, ''இளவரசி மதூலிகாவை மணம் புரிந்தால், ஒரே மாதத்தில் நமது இளவரசர் பாம்பு தீண்டி இறந்து போவார்!'' என்றதும் அவையில் இருந்த அனைவரும் திடுக்கிட்டனர். எல்லாரையும் விட இளவரசன் மிகவும் அதிர்ச்சி அடைந்தான். பிறகு சமாளித்துக் கொண்டு, ''தந்தையே! மனிதனாகப் பிறந்த அனைவரும் ஒருநாள் இறக்க வேண்டும். ஜாதகத்தைக் காரணம் காட்டி, மதூலிகாவை

மணக்க மறுப்பது எனக்கு சரியாகத் தோன்றவில்லை,'' என்றான்.

மதூலிகாவின் அழகு எனும் போதையில் மூழ்கிப்போனதால் இளவரசனின் சிந்திக்கும் திறன் மறைந்து விட்டது என்று அரசர் கருதினார். ஆனால் அவனது விருப்பத்திற்கு எதிராக தனது அபிப் பிராயத்தை வெளியிடத் தயங்கினார். அவருடைய தர்ம சங்கடத்தை உணர்ந்து கொண்ட தூதுவன், ''ஆரசே! தாங்கள் நன்கு யோசனை செய்து தங்கள் முடிவை பிறகு தெரிவியுங்கள். நான் வருகிறேன்!'' என்று கூறி தூதுவன் அகன்றான்.

சில நாள்கள் சென்றன. அரசரால் எந்தத் தீர்மானத்திற்கும் வர முடிய வில்லை. ஒ ருநாள் தி னகரன் த ன் வீரர்களுடன் காட்டிற்கு வேட்டை யாடச் சென்றான். நண்பகல் நேரம், ஒரு மரத்தின் அடியில் தினகரன் ஓய்வெடுக்க, அவனது வீரர்கள் சற்று தள்ளி அமர்ந்திருந்தனர். அப்போது எதிர்பாராத விதமாக, தினகரனுக்குப் பின்புறமாக வந்த ஒரு மலைப்பாம்பு அவனைச்சுற்றிக் கொண்டது. மலைப் பாம்பு அவன் உடலைச் சுற்றிக் கொண்டு அழுத்த முயற்சி செய்ய, தினகரன் அதை எதிர்த்துத் திமிற, இருவரும் மண்ணில் புரண்டு உருண்டனர். அவனுடன் வந்த வீரர்கள் என்ன செய்வதென தெரியாமல் பிரமை பிடித்து நின்றனர். ஈட்டியை எறியவோ, கத்தியால் தாக்கவோ முயன்றால், அது தவறிப்போய் பாம்புக்கு பதிலாக



இளவரசன் மீது பட்டு விட்டால் என்ன செய்வது என்று அனைவரும் தயங்கினர். அந்த சமயம் எங்கிருந்தோ சரமாரியாகப் பாய்ந்து வந்த அம்புகள் மலைப்பாம்பைத் தாக்க, அது இளவரசனை விட்டுவிட்டு மண்ணில் புரண்டு விழுந்து இறந்தது. அனை வரும் அம்புகள் வந்த திசையை நோக்க அங்கு ஒரு ரதத்திலிருந்து அழகு தேவதையாகக் காட்சியளித்த ஒரு பெண் வில் அம்புடன் இறங்கி வந்தாள். அவள் வேறு யாருமல்ல, ஓவியத்தில் கண்ட மதூலிகாவே தான்.

அதற்குள் இளவரசனை அணுகிய அந்த அழகி, ''நான் உஷா புரியின் இளவரசி மதூலிகா. காட்டைச்சுற்றிப் பார்க்கத் தோழிகளுடன் வந்தேன். வந்த இடத்தில் உங்களை மலைப் பாம்பிடமிருந்து காப்பாற்றும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது.



நீங்கள் யார் என்று நான் தெரிந்து கொள்ளலாமா?'' என்று தேனினும் இனிய குரலில் கேட்டாள்.

''நான்தான் சஞ்சீவபுரியின் இளவரசன் தினகரன். என்னை மலைப்பாம்பிடமிருந்து தகுந்த நேரத்தில் காப்பாற்றிய உனக்கு என் நன்றி'' என்று தினகரன் பதில் அளிக்கவும், இளவரசனைக் கண்டு கொண்டதால் ம தூலிகா ந ாண மடைந்து தன் தோழிகளுடன் உடனே கிளம்பிச் சென்று விட்டாள்.

ஆனால் விஷயமறிந்ததும் மன்னர் மகிழ்ச்சி அடைவதற்குப் பதிலாக, மதூலிகாவுடன் திருமணம் நடப்பதற்கு முன்பே, தினகரனுக்குப் பாம்பினால் ஆபத்து உண்டானால் திருமணத்திற்குப் பிறகும் நிச்சயம் பாம்பினால் தீங்கு உண்டாகும் என்று எண்ணிக் கவலை கொண்டார். ஒரு வாரங்கழித்து, ஒருநாள் தினகரன் அரண்மனை விதூஷகனுடன் நந்த வனத்தில் உரையாடிக்கொண்டு நடந்து செ சல்கையில், ப ாதையின் குறுக்கே சென்ற ஒரு பாம்பை தெரியாமல் மி தித்து வி ட்டான். உடனே மிதிபட்ட பாம்பு சீறிக் கொண்டே தினகரனைத் தீண்டியது. தினகரன் அந்தப் பாம்பைக் கொன்று விட்டான். ஆனால் உடலில் விஷம் பரவி, ம யக்கமாக வீ ழ்ந்தான். விதூஷகன் அலறித் துடித்து மருத்து வரை உடனே அழைத்து வர, அவரும் மூலிகைச் சாறு ஒன்றை பாம்பு தீண்டிய இடத்தில் தடவி, இளவரசனை குணமாக்கினார்.

இது நடந்து சில நாள்களுக்குப் பிறகு, ஒரு இரவு நேரத்தில் தினகரன் உறங்கப் போகு முன்னர், ஒரு தாதிப் பெண் பருகப் பால் கொண்டு வந்தாள். தினகரன் அதை அருந்த முயற்சிக்கையில், பாத்திரம் கைதவறி விழ, பால் தரையில் கொட்டியது. அந்தப் பக்கம் வந்த அரண்மனைப் பூனை அ தை ந க்கிக் கு டிக்க, அ து உடனே இறந்து விழுந்தது. அதைத் தொடர்ந்து அரண்மனையில் பெரிய கலவரம் ஏற்பட்டது. பாலில் விஷம் இருந்தது கண்டு பிடிக்கப்பட்டதால், இளவரசனுக்குப் பால் கொண்டு வந்த த ாதிப் பெ ண்ணை அ டித்து உதைத்ததில் அவள் பகைவர் நாட்டுப் பெண் என்றும், பகைவர்களின் தூண்டுதலால் இளவரசனைக் கொல்லத் திட்டமிட்டு, அரண்

மனையில் தாதிப் பெண்ணாக பணிக்குச் சேர்ந்திருக்கிறாள் என்பதும் தெரிய வந்தது. உடனே அவள் சிறையில் அடைக்கப் பட்டாள்.

இந்த நிகழ்ச்சிக்குப் பின்னர், ஒருநாள் உஷாபுரியின் தூதுவன் இளவரசியின் திருமண விஷயத்தில் மன்னர் கமலபத்திரர் என்ன முடிவு எடுத்துள்ளார் என்பதை அறிய வந்திருந்தான். திருமணப் பேச்சை தூதுவன் எடுத்ததுமே, மன்னர் ''தினகரன்- மதூலிகா திருமணத்தைப் பற்றி இன்னொரு முறை என் காது படச் சொல்லாதே! அன்றொருநாள் மதூலிகாவை என் மகனுக்குத் திருமணம் செய்ய நீ முன்மொழிந்தது முதல், இத்துடன் மூன்று பாம்பினால் என் மகன் மரணத்தைத் தழுவ இருந்தான். இதற்குப் பிறகும் உங்கள் மதூலிகாவைத் திருமணம் புரிந்தால், என் மகன் உயிருக்கு நிச்சயம் ஆபத்து வரும். ஆகையால் இந்தத் திருமணம் நடக்காது!'' என்று காரசாரமாகக் கூறியவர், சோதிடரைப் பார்த்தார்.

சோதிடரும் உடனே, ''ஆமாம் பிரபு! திருமணத்திற்கு முன்பே மூன்று கண்டங்கள் இளவரசருக்கு ஏற்பட்டு விட்டன. திருமணம் நடந்தால், அவர் பாம்பு தீண்டி இறப்பார் என்பதில் சந்தேகமில்லை. ஏனெனில் அவள் ஜாதகம் அப்படிப்பட்டது'' என்றார்.

தூதுவன் பரிதாபமாக இளவரசன் தினகரன் பக்கம் திரும்பினான். இளவரசன் என்ன பதில் கூறப் போகிறான் என்று ஆவலுடன் தூதுவன் மட்டுமல்லாமல், அவையி



லிருந்த அனைவரும் இளவரசனையே பார்த்தனர். தினகரன் பிறகுகம்பீரமாக எழுந்து நின்று, ''நான் மதூலிகாவைக் கட்டாயம் திருமணம் செய்து கொள்ளப் போகிறேன்'' என்று உறுதியான குரலில் கூறினான்.

இந்த இடத்தில் கதையை நிறுத்திய வேதாளம், விக்கிரமனை நோக்கி, ''மன்னா! அரண்மனை சோதிடர் மதூலிகாவுடன் திருமணம் நடந்தால், தினகரன் பாம்பு தீண்டி இறப்பான் என்று சொன்னார். அவர் கூறியதை நிரூபிப்பதுபோல், திருமணம் ஆவதற்கு முன்பே, மூன்று முறை பாம்பினால் இளவரசன் உயிருக்கே அபாயம் நிகழ இருந்தது. அப்படியிருந்தும், தினகரன் சோதிடரை நம்பாமல் மதூலிகாவை மணம் புரிய விரும்பினான். இதிலிருந்து மதூலிகாவின் அழகில்

மயங்கியதால் தினகரனின் அறிவு மழுங்கி விட்டது என்பது தெரிய வில்லையா? மோகம் அவன் கண் களை மூடிவிட்டது என்பது தெரிய வில்லையா? என் கேள்விகளுக்கு பதில் தெரிந்தும், நீ மௌனமாக இருந்தால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகும்!'' என்றது.

உடனே விக்கிரமன், ''முதன் முதலாக மதூலிகாவின் ஓவியத்தைக் கண்டதும், தினகரன் அவளால் கவரப் பட்டான் என்பது உண்மை. காட்டில் அவளை நேரில் கண்டதும், தினகரன் அவள் மீது அன்பு செலுத்தத் தொடங்கியதும் உண்மையே! அரச குலத்தில் பிறந்தவர்களுக்கு வெற்றி, வீர மரணம் ஆகிய இரண்டுக்குமே சம வாய்ப்புகள் இருப்பதால், அவனுக்கு மரணத்தைப் பற்றிய பயமில்லை. ஆதலால் முதன் முதலில் அரண் மனை சோதிடர் மதூலிகாவின் ஜாதகப்படி அவளை மணந்தால் ஒரு மாதத்திற்குள் அவன் பாம்பு கடித்து இறப்பான் என்று சொன்னதைக் கேட்டு புண்படும்படியாக பேச விருப்பமில்லாததாலும், சோதிடருடன் தர்க்கம் செய்ய விரும்பாத தாலும், தன் கருத்தை வலியுறுத்த வில்லை. திருமணத்திற்கு முன்பே பாம்பின் மூலம் மூன்று முறை ஆபத்து வந்ததும், இது எதிரிகளின் சதி என்று தான் எண்ணினான். ஏனெனில் அவன் ஒரு சிறந்த பகுத்தறிவாளனும் கூட! ஆனால் அவையில் அனைவர் முன்னிலையில் திருமணத்திற்குப் பின் மதூலிகாவின் ஜாதகப்படி தனக்கு இறப்பு நேரும் என்ற சோதிடர் அதற்கு முன் நடந்த விபத்து களுக்கும் அவளுடைய ஜாதகத் தையே காரணம் காட்டியதும், அவனுக்கு சோதிடத்தில் நம்பிக்கைக் குறைவு ஏற்பட்டது! தன் உயிரைக் காப்பாற்றிய பெண்ணின் ஜாதகத்தின் மூலம் தனக்கு எப்படி மரணம் நிகழும் என்று எண்ணி இளவரசன் எடுத்த முடிவில் எந்த மோகமோ, ஈர்ப்போ கிடையாது'' என்றான்.

விக்கிரமனது இந்த சரியான பதிலால் அவன் மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலுடன் இருந்த வேதாளம் மீண்டும் பறந்து சென்று முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது.






# குகைக் கோயில்கள்

அஜந்தா, எல்லோரா என்ற பெயர்களைக் கேட்டவுடன், நமக்கு ஓவியங்களைப் பற்றித்தான் உடனே நினைவிற்கு வரும். ஆனால் இந்த ஓவியங்களைத் தாங்கி நிற்கும் குகைக் கோயில்களை அக்காலத்தில் எத்தனை சிரமப்பட்டு உருவாக்கினார்கள் என்று யோசித்து பார்த்ததுண்டா?

நீங்கள் கடற்கரை மணலில் வீடு கட்டு விளையாடி இருப்பீர்கள். முதலில் மணலை மலை போல் குவித்து, அதன்பிறகு பிரதான வாயிலையும், மற்ற வாயில்களையும் வீட்டுக்குள் அறைகளையும் கையினால் மணலைத் தோண்டியெடுத்து உருவாக்குகிறீர்கள் அல்லவா? கிட்டத்தட்ட அதேபோல்தான், பழங்காலத்தில் குகைக் கோயில்களை மலைகளைக் குடைந்து உருவாக்கினார்கள். சுமார் 2,000ம் ஆண்டுகளுக்கு முன்னரே, இவ்வாறு இந்தியாவில் குகைக் கோயில்கள் உருவாக்கப்பட்டதாகத் தெரிகிறது.



முதலில் ஒரு மலையைத் தேர்ந்தெடுத்து, அதில் வாயில், உள் அறைகள் எங்கே எவ்வாறு அமைய வேண்டும் என தீர்மானித்த பிறகு பாறையைக் குடைந்து கோயில்களை உருவாக்கினார்கள். முதலில் மேற்புறத்திலிருந்து தொடங்குவது வழக்கமாக இருந்தது. மும்பை அருகிலுள்ள கார்லேயில், இவ்வாறு ஒரு குகைக்கோயில் 2,000ம் ஆண்டுகளுக்கு முன் உருவாக்கப்பட்டது. இவ்வாறு மலையைக் குடைந்து கோயில்களை அமைப்பவர்களுக்கு அசாத்திய திறமையும், பொறுமையும் இருந்திருக்க வேண்டும் என்பது எல்லோராவிலுள்ள குகைக் கோயில்களைப் பார்த்தாலே தெரிகிறது.

ராஜஸ்தான் நாட்டுப்புறக் கதை

# கழுதை மனிதனாக மாற முடியுமா?

**ரா**ஜஸ்தான் மாநிலத்தில் ஒரு கிராமத்தில் ஜீவன்சிங் என்ற வியாபாரி வசித்து வந்தான். சிறு வயதிலிருந்தே வியாபாரத்தில் ஈடுபட்டதால், அவனுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. அவனிடத்தில் ஒரு கழுதை இருந்தது. பக்கத்திலுள்ள நகரத்திற்குப் பொருட்கள் வாங்கச் செல்லும்போது தன்னுடைய கழுதையைக்கூட அழைத்துச் சென்று, அவற்றை கழுதை மீது சுமத்தி, கிராமத்திற்குத் திரும்பி வருவது அவன் வழக்கம். அவ்வாறு ஒருமுறை



நகரத்திற்குச் சென்று, நண்பகல் வரை பொருட்கள் வாங்கிய பிறகு, ஜீவனுக்குக் களைப்பாக இருந்ததால், ஒரு சாலையில் மரத்தின் நிழலில் சற்று ஓய்வெடுத்தான்.

அப்போது சற்று தொலைவில் ஒரு வீட்டிலிருந்து யாரோ உரக்க சத்தமிடுவது கேட்டது. சிறுவர்களுக்குத் தன் வீட்டில் பாடம் கற்பித்துக் கொண்டிருந்த ஒரு ஆசிரியர்தான் அவ்வாறு உரக்கக் கத்தினார். ''முட்டாள்களா! உங்களுடன் கத்திக் கத்தி தொண்டை வறண்டு போகிறது. நீங்கள் எல்லாம் சுத்தக் கழுதைகள். உங்கள் தலையில் எதுவும் ஏறுவதில்லை. உங்களை மனிதர்களாக்க நான் எவ்வளவு கஷ்டப்பட வேண்டியிருக்கிறது!'' என்று அவர் கத்தியதைக் கேட்டவுடன், ஜீவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. 'நாம்தான் சிறுவயது முதலே பள்ளிக்குச் செல்லாமல் மூடனாக இருந்து விட்டோம். இதோ, இந்த ஆசிரியர் கழுதைகளைக் கூட மனிதர்களாக ஆக்க முயற்சி செய்கிறார். இவரிடம் நம் கழுதையையும் சேர்த்து விட்டால், நம் கழுதையை ஒரு புத்திசாலி மனிதனாக மாற்றிவிடுவார். பிறகு அவனை வைத்துக் கொண்டு நமது

வியாபாரத்தை நன்றாக அபிவிருத்தி செய்யலாம்!' என்று தோன்றியது.

உடனே ஜீவன் தன் கழுதையுடன் அந்த ஆசிரியர் வீட்டுக்குச் சென்றான். அவரை வணங்கி அவரிடம், ''ஐயா! தாங்கள் கூறியது என் காதில் விழுந்தது. நீங்கள் என்னுடைய கழுதையை ஒரு மனிதனாக மாற்றித் தந்து விடுங்கள். அதன்மூலம் எனக்கு வியாபாரத்தில் உதவி செய்ய ஒரு புத்திசாலி ஆள் கிடைப்பான்'' என்று முறையிட்டான். ஜீவன் ஒரு சரியான முட்டாள் என்று தெரிந்து கொண்ட அந்த ஆசிரியர், ''உன் கழுதையை என்னிடம் விட்டு விடு! அதை மனிதனாக மாற்றி, பயிற்சி அளித்து, புத்திசாலியாக ஆக்கி விடுகிறேன். மூன்று மாதம் கழித்து, ஒரு புத்திசாலி மனிதனாக மாறிய கழுதையை நீ எடுத்துக்கொள்! ஆனால் அதற்கு நிறைய செலவாகும்'' என்றார்.

அதற்கு ஒப்புக் கொண்ட ஜீவன் தன்னிடமிருந்த பணத்தை எல்லாம் அவருக்குக் கொடுத்து விட்டு, வாங்கிய பொருட்களை தானே சுமந்து கொண்டு வீடு திரும்பினான். ஆசிரியருக்கோ ஒரே ஆனந்தம்! ஆசிரியர் ஜீவனுடைய கழுதையை ஒரு காசு செலவின்றி, தனக்காகப் பயன்படுத்திக் கொண்டார்.

மூன்று மாதங்கள் கழித்து ஜீவன் ஆசிரியரை மீண்டும் சந்தித்தான். தன்னுடைய கழுதை ஒரு புத்திசாலி இளைஞனாக மாறியிருக்கும், அவனைத் தன்னுடன் அழைத்துச் செல்வோம் என்று நம்பிய ஜீவனுக்கு



ஏமாற்றம் ஏற்பட்டது. ஆசிரியருக்கு உண்மையை ஒப்புக் கொள்ள மனமில்லை. தவிர கழுதையை திருப்பித் தரவும் விரும்பவில்லை. எனவே சாமர்த்தியமாக, ''ஜீவன்! உன் கழுதையை ஒரு கெட்டிக்கார இளைஞனாக மாற்றிவிட்டேன். பக்கத்து கிராமத்தில் பஞ்சாயத்துத் தலைவர் இறந்து விட்டபோது, கிராமத்தினர் அந்தப் பதவிக்குத் தகுதியான ஓர் இளைஞனைத் தேடி இந்தக் கி ராமத்திற்கு வ ந்தனர். அவர்கள் உன் கழுதையை அழைத்துச் சென்று தங்கள் கிராமத்திற்குத் தலைவராக ஆக்கி விட்டனர். ஆகவே நீ அங்கே சென்று, அவனை அழைத்துச் செல்!'' என்று கூறிவிட்டார்.



'அடடா! ஏன் ஆசிரியர் என் னிடம் தவறான தகவலைத் தந்து என்னைச் சிரமப் படுத்தினார்!' என்று ஜீவன் எண்ணினான். 'சரி, சாமியாராக இருப்பவர்களுக்கு ஆழ்ந்த ஞானமும், எதிர்காலம் அறியும் திறனும் இருக்கும். அவருடைய ஆலோசனைகளைக் கேட்டு வியாபாரம் செய்வோம்!' என்று எண்ணியவாறு, அந்த சாமியாரைத் தேடி ஜீவன் பல

ஜீவன் அவர் குறிப்பிட்ட பக்கத்து கிராமத்திற்குச் சென்று தலைவரை சந்தித்தான். 'ஆகா! ஆசிரியர் குறிப் பிட்டதுபோல் இவர் இளைஞராக இல்லையே!' என்ற சந்தேகத்துடன் தலைவரை அணுகி, ''தம்பி! என்னைத் தெரிகிறதா? நான்தான் உன் எஜமானர். உன்னை அழைத்துச் செல்ல வந்திருக்கிறேன்!'' என்றான். தலைவருக்கு ஒன்றுமே புரிய வில்லை. பிறகு ஜீவன் ஆரம்பத் திலிருந்து நடந்த நிகழ்ச்சிகளைக் கூறினான். உண்மையைப் புரிந்து கொண்ட தலைவர் ஜீவனுடைய அறியாமையை மேலும் தூண்டி விட்டு வேடிக்கை பார்க்க எண்ணி, ''ஜீவன்! ஆசிரியர் தவறாகக் கூறி விட்டார்! நீ தேடும் ஆள் நான் இல்லை. மனிதனாக மாறிய உன் கழுதையை ஒரு மசூதியின் சாமியார் ஆக ஆக்கிவிட்டார்கள். நீ அந்த சாமியாரை சந்தித்து அவரை உன்னுடன் அழைத்துச் செல்!'' என்றார்.

இடங்களுக்குச் சென்றான். ஆனால் எங்கும் கிடைக்கவில்லை. களைத்துப் போன ஜீவன் மசூதியின் அருகே இருந்த ஆற்றங்கரையில் சற்று இளைப்பாறலானான். அங்கு அந்த சாமியார் தியானத்தில் ஆழ்ந்திருந் திருப்பதைக் க ண்டான். அ வர் தியானத்திலிருந்து கண் விழிக்கும் வரை ஜீவன் பொறுமையாகக் காத்திருந்தான். பிறகு அவரிடம், ''உனக்கு என்னை நினைவிருக் கிறதா? உன்னை பக்கத்து கிராமத்து ஆசிரியரிடம் மனிதனாக மாற்ற விட்டுச் சென்றிருந்தேன். உன்னை ஞான ஒளி வீசும் சாமியாராக அவர் மாற்றி வி ட்டார். நீ க ழுதையாக இருந்தபோது, நான் உன் எசமானனாக இருந்தேன்,'' என்றான்.

''நான் கழுதையாக இருந்தேனா? என்ன உளறுகிறாய்? '' என்றார் சாமியார் கோபத்துடன். பிறகு ஜீவன் எழுதப் படிக்கத் தெரியாத பாமரன் என்று உணர்ந்து கொண்டதும்,

சாமியார் சாந்தம் அடைந்தார். பிறகு, ''அப்பா! உன்னை யாரோ ஏமாற்றி விட்டார்கள்! முதலில் ஆரம்பத்தில் இருந்து உ ன் க தையை எ னக்கு சொல்!'' என்றார்.

ஜீவன் நடந்தவற்றையெல்லாம் கூறினான். சாமியார் கண்களை மூடிக் கொண்டு கொஞ்ச நேரம் யோசித்தார். ஜீவன் மிகுந்த ஆர்வத்துடன் அவரையே பார்த்துக் கொண்டு இருந்தான். கண்களை விழித்த சாமியார், ''சில விஷயங்களை நீ தெளிவாகப் புரிந்து கொள். மிகுந்த வீரத்துடனும், துணிச்சலுடனும் கம்பீரமாக இ ருக்கும் ஒ ருவனை சிங்கம் என்று சொல்கிறோம். ஆனால் உண்மையில் அவன் சிங்கமில்லை. மனிதன்தான்! தந்திரமும், சூழ்ச்சியும் நிரம்பிய ஒருவனை குள்ளநரி என்கிறோம். ஆனால் அவன் உண்மையில் நரி அல்ல! மனிதன் தான்! அதுபோல் எத்தனை சிரமப் பட்டு பாடம் கற்பித்தாலும், அதைப் புரிந்து கொள்ள முடியாத சிறுவர்களைத்தான் கழுதைகள் என்று அந்த ஆசிரியர் குறிப் பிட்டார். அவர்கள் உண்மையில் கழுதைகள் அல்ல! மனிதனாக்க முயல்கிறேன் என்றால், பகுத்தறிவு உள்ள மனிதனாக ஆக்குகிறேன் என்று பொருள்பட அந்த ஆசிரியர் கூறியதை நீ தவறாக எடுத்துக் கொண்டாய். பேராசை பிடித்த ஆசிரியரும் உன்னை நன்கு ஏமாற்றி விட்டார். அந்த ஆசிரியரிடமே திரும்பிச் செல்! அவருடைய வீட்டில் நன்றாக தேடிப்பார்! உன் கழுதை கட்டாயம் இருக்கும். கழுதையை உண்மையிலேயே மனிதனாக மாற்ற முடியாது. நீ உன் கழுதையை மனிதனாக்கும் ஆசையை விடுத்து, அதைக் கூட்டிச் செல்'' என்றார்.

ஆசிரியர் வீட்டிற்குச் சென்ற போது, ஆசிரியர் வீட்டில் இல்லை. ஆனால் அவர் வீட்டின் கொல்லைப் புறத்தில் ஜீவனுடைய கழுதை தென்பட்டது. உடனே ஜீவன் இந்த மட்டில் நம் கழுதை மீண்டும் பத்திரமாகக் கிடைத்ததே என்று ஆறுதல் அடைந்த ஜீவன், உடனே கழுதையை கூட்டிக் கொண்டு தன் கிராமம் நோக்கிக் கிளம்பினான்.



# செய்திச்சுடர்

## ‘உயர்ந்த’ மனிதர்கள்

குள்ளமாக இருப்பவர்கள் தங்கள் உயரத்தை அதிகரிக்க முடியுமா என்று பலவிதப் பயிற்சிகளைச் செய்யும் நேரத்தில், ஆந்திராவில் ராமகுண்டத்தில் உள்ளகட்டய்யா என்ற 29 வயது இளைஞர் மட்டும், தான் இவ்வளவு உயரமாக இருக்கிறோமே என்று வருத்தப்படாத நாளேயில்லை. ஆம், அவருடைய உயரம் ஏழரை அடி! ராஜநரசு, நரசம்மா என்ற தம்பதிக்குப் பிறந்த ஆறு குழந்தைகளில் கட்டய்யாவும் ஒருவர். 11 வயது வரை மற்ற சிறுவர்களைப் போல் சாதாரணமாக இருந்த கட்டய்யாவுக்கு ஒருநாள் திடீரென காய்ச்சல் ஏற்பட்டது. அந்த தினம் தொடங்கி, அடுத்த எட்டு ஆண்டுகள் வரை அவருடைய உயரம் பயங்கரமாக அதிகரித்து ஏழரை அடியை எட்டியது. இவ்வாறு உயர்ந்து கொண்டே போனால், அவர் மூளை பாதிக்கப்படும் என்று நினைத்த மருத்துவர்கள் அவருக்கு 1996ஆம் ஆண்டு ஒரு அறுவை சிகிச்சை புரிந்தார்கள். அதன்பிறகு அவர் உயர்வது நின்றது. ஆனால் அதற்குள்ளேயே பனைமரம் போல் வளர்ந்து விட்டார்.



பெரியவனான பிறகு அவருக்குச் சரியான வேலையே கிடைக்கவில்லை. விளக்குக் கம்பங்களில் விளக்கு பொறுத்தும் வேலை, உயரமான கட்டடங்களுக்கு வெள்ளையடிக்கும் வேலை ஆகிய சில வேலைகளே கிடைத்தன.

ஆனால் ஜெர்மனியைச் சேர்ந்த 38 வயதான ஹெரால்ட் என்பவர் இவ்வாறு சிரமப்படவில்லை. ஏழு அடி ஒரு அங்குலம் உயரமான இவர் கேரளா மாநிலத்து கேலிகட்டைச் சேர்ந்த ஷெரீன் என்ற பெண்ணை மணந்து குழந்தை குட்டிகளுடன் சுகமாக இருக்கிறார். மும்பையில் ஒரு நூற்பாலையில் வேலை பார்த்து வந்த ஷெரீன் ஒருநாள் அங்கே ஹெரால்டைக் கண்டதும் அவரது உயரத்தில் மயங்கி, 1993ஆம் ஆண்டு அவரைத் திருமணம் செய்து கொண்டாள். சமீபத்தில் அவர் கேரளாவிற்கு வருகை தந்த போது, திரளான மக்கள் அந்த தம்பதியை வரவேற்று மகிழ்ந்தனர்.

# THE ADVENTURES OF G-man

## அண்ட்ரோமேனியா

### கதை : நெதர்வேர்ல்ட் பகுதி 2

வழங்குவோர்




POWER SUPPLY

இணையாக விளங்கும் ஒரு பிரபஞ்சத்தில்* ஜீ-மேன் அந்த உலகில் வசிக்கும் ஜீ-மேனைத் தேட ஆரம்பிக்கிறான். ஜீ-மேனின் நோக்கம் என்னவென்றால் அத்தகைய மனிதனைத் தன் உலகிற்குக் கொண்டுவந்து டெர்ரோலீனுடன் சண்டை போட்டு வெற்றிபெற வேண்டும் என்பதே.







எனக்கு உதவுங்கள் !!

ஜீ-மேனின் முயற்சி பலனடைகிறது

HELP ME !!

ஒரு தாங்கமுடியாத வலி அதனுடன் வருகிறது

* மற்ற பிரபஞ்சங்களில் நம் உலகத்தைப் போலவே நிலைமைகள் நிலவுகின்றன.

கொஞ்ச நேரம் ஓய்வெடுத்த பின் ஜீ-மேன் அங்கு கூடியிருப்பவர்களிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு தான் கேட்ட குரல் வந்த திசையில் செல்ல ஆரம்பிக்கிறான்.



தன்னை ஒருவரும் அடையாளம் கண்டு கொள்ளாமலிருக்க, ஜீ-மேன் அவர்களுடைய ஆடையை அணிகிறான்.

மற்றவர் மனதை அறியும் சக்தி, ஜீ-மேனை ஒரு பாழடைந்த நகரத் தெருவிற்கு கொண்டு செல்கிறது.







நகரத்தின் கதவுகளின் மூலமாக செல்வது சற்று கஷ்டமாகத்தான் இருந்தது.

உண்மையான பிரச்னை எப்போது வரும் என்றால் டெர்ரோலீனின் தலைமை அலுவலகத்தின் பாதுகாப்பை கடந்து செல்லும்போதுதான்.

ஆனால் ஜீ-மேனுக்கு ஒரு அனுகூலமான நிலை இருந்தது.



திடீரென அனைவரையும் திகைக்கவைக்கும் குணம்.







க்கான பவர் சப்ளை




தன்னுடைய ஜீ-ஃபோர்ஸ் பயன்படுத்தி அனைவரையும் வீழத்துகிறான்.


நீங்களெல்லாம் என்னைப் பாத்து திகைச்சுப் போயிட்டீங்க இல்ல...


ஜீ-மேன்?!!






மன்னிச்சுக்கங்க உங்களோட பேசிகிட்டிருக்க எனக்கு நேரமில்ல. என் காரியத்தை முடிக்கணும்.



மற்றவர்கள் மனதை அறியும் தன் சக்தியின்படி தன் காரியங்களை நிறைவேற்றுகிறான் ஜீ-மேன்...



ஜீ-மேனின் எதிரிகள் அவனை ஒரு டவரின் இருட்டறைக்கு கொண்டு செல்கின்றனர்.

நான் நினச்சது சரிதான். சூரிய வெளிச்சமே இல்லாத ஒரு இருட்டு அறையில் ஜீ-மேனை அடைச்சு வைச்சிருக்காங்க.

HELPP MEEE!!!

அதோ,
நீ அங்கே இருக்கே!
இல்ல ஒரு வேளை நான்
அங்கே இருக்கேன்னு
சொல்லணுமா.

KABOOMM

நீங்க எழுந்திருக்க
வேண்டாம்.
எனக்குப் போகத்
தெரியும்.




அது தான் என்னோட கதை. நாம ஒரு உடன்பாட்டுக்கு வரலாமா? நீ செளக்கியமா ஆன பிறகு என் உலகத்துல வந்து நீ எனக்கு உதவி பண்ணு. அதுக்கு பதிலா நான் உன் கூட திரும்பி வந்து என்னால முடிஞ்ச வரை உன் விஷயத்துல உனக்கு உதவி பண்றேன். சரியா....


என் உயிரைக் காப்பாத்தினது நீ தான் ஜீ-மேன். நான் உனக்கு ரொம்ப கடமை பட்டிருக்கேன். நீ உதவி பண்ணினா அதை என்னிக்கும் மறக்க மாட்டேன். உன் வார்த்தையே என் வார்த்தை. ஆமாம், இது ஒரு உடன்பாடுதான்.
தொடரும்...




# ஜீ-மேன் புதிர்

1. மனதை சீர்குலைக்கும் கருவி
அ. நியூரால்
ஆ. நியூரான்
இ. நரம்பு

2. நீர் அரக்கன்
அ. குளூகா
ஆ. நீராவி மனிதன்
இ. குளுக்கா

3. இருட்டின் ராஜா
அ. டெர்ரோலீன்
ஆ. டெர்ராக்ஸ்
இ. டெர்மினேட்டர்

4. டெர்ரோலீன் குழந்தைகளைக் கடத்திக் கொண்டு போய் கீழேயுள்ள தன் இரகசிய தலைமையகத்தில் அடைக்கிறான்
அ. மர்மத் தீவு
ஆ. கஞ்சத் தீவு
இ. துன்பத் தீவு

5. ராட்சத கொலையாளிகளைக் கொண்ட ஒரு பெரிய படை டெர்ரோலீனிடம் உள்ளது
அ. பன்னீஸ்
ஆ. அன்ட்ராய்ட்ஸ்
இ. தக்காளிகள்

1-அ, 2-இ, 3-அ, 4-இ, 5-ஆ.




சூப்பர் ஹீரோக்களுக்கான பவர் சப்ளை



PARLE

# CROSSWORD




### Across

1. Suryaraj teaches in this school ______________
2. Terrolene has an army of evil ______________
3. Power supply for G-man ______________

### Down

1. The desert where the gateway to other dimensions is ________
2. G-man goes in search of the other ______________
3. G-man goes through the portal to enter into a parallel ________
4. Major Suryaraj was in the Indian ______________

POWER SUPPLY FOR







Visit: www.parleproducts.com

மாங்காட்டிற்கு ஏர்காட்டை விட சலுகை காட்டியுள்ளீர்களே. இது சரி என்று எனக்குப் படவில்லை'' என்றான்.

அரசனும் ''சொல்வதைச் சரியாகச் விளங்கும்படி சொல்'' எனவே ஞானசேகரனும் "வேலாங்காட்டில் வறட்சியால் பாதிக்கப்பட்ட ஒருவனுக்கு லட்சம் ரூபாய் கொடுத்தீர்கள். மாங்காட்டிலோ வறட்சியால் பாதிக்கப்பட்ட இருவருக்கு லட்சம் ரூபாய். ஏர்க்காட்டிலோ வறட்சியால் பாதிக்கப்பட்ட மூன்று பேர்களுக்கு லட்சம் ரூபாய். நீங்கள் மாங்காட்டில் இருவருக்கு இரண்டு லட்சமும் ஏர்க்காட்டில் மூவருக்கு மூன்று லட்சமும் கொடுத்தால் தானே நியாயமாக இருக்கும்?'' என்றான்.

அரசனோ ''என்ன உளறுகிறாய்? வேலாங்காட்டில் ஒருவரும் மாங்காட்டில் இருவரும் ஏர்க்காட்டில் மூவர் மட்டுமே வறட்சியால் பாதிக்கப்பட்டவர்களா? நானே அக்கிராமங்களுக்குப் போய்ப் பார்த்து மக்கள் அவதிப்படுவதைக் கண்டு ஒவ்வொரு கிராமத்திற்கும் லட்சம் ரூபாய் வீதம் கொடுத்தேன். நீ என்னமோ மூன்று கிராமங்களிலும் உள்ள ஆறு பேர்களுக்குத்தான் கொடுத்ததாகச் சொல்கிறாயே! உனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா என்ன?'' என்றான்.

ஞானசேகரனும் ''அரசே! நீங்கள் ஒரு மகாத்மாவை கௌர





யாக வாழ்க்கை நடத்துவோம்'' என்றான். ரவி உடனே, ''மாமா, நீங்கள் சொல்லும் வாக்கும் பலிக்கும். எங்களுக்கு நல்ல மனைவிகள் கிடைப்பார்கள். அதுவும் அவர்கள் இருவரும் சகோதரிகளாக இருந்தால், இன்னும் நல்லது. அவர்கள் தங்களுக்குள் ஒற்றுமையாகவும் இருப்பார்கள்'' என்றான்.

ராமன் புன்னகையுடன் '' எனக்கு இப்போதுதான் ஒரு விஷயம் ஞாபகம் வருகிறது. பக்கத்து ஊரான நாராயண புரத்தில் விசுவநாதன் என்பவர் திருமண விஷயமாக என்னிடம் பேசினார். அவருக்கு இரண்டு பெண்கள் கல்யாண வயதில் உள்ளனர். நீங்கள் இருவரும் சென்று பெண் பார்த்துவிட்டு வந்தீர்களானால் மிகவும் நல்லது. உங்களுக்குப் பிடித்திருந்தால் உடனே அந்த இரு சகோதரிகளுடன் உங்கள் திருமணத்தை நிச்சயம் செய்து விடலாம்'' என்றார். உடனே ரகுவும் ரவியும் ''பெண் பார்க்க நாம் எல்லாரும் சேர்ந்து போவோம்'' என்றான். அடுத்த நாளே விசுவநாதனுக்கு தாங்கள் பெண் பார்க்க வருவதாகத் தகவல் அனுப்பப் பட்டது. மறுநாள் ரகு, ரவி இருவரும் தங்கள் பெற்றோருடன் கிருஷ்ணன் தம்பதியையும் அழைத்துக் கொண்டு பெண் பார்க்கச் சென்றனர்.

திருமணப் பெண்களின் வீட்டை அடைவதற்கு சற்று முன்னால், ராமனுக்கு திடீரென்று மார்பு வலி ஏற்பட்டது. வண்டியில் இருந்து இறங்கியதும் ராமனின் நிலையை அறிந்த விசுவநாதன் அவரை கைத் தாங்கலாக உள்ளே அழைத்துச் சென்று தன் வீட்டு அறையில் படுக்க வைத்து உடனடியாக மருத்துவரையும் கூப்பிட்டார். ராமனைப் பரிசோதித்த மருத்துவர், ''கவலைப்படும்படி ஒன்றும் இல்லை. ஆனால் மார்பு வலிக்கு பரிபூரண ஓய்வு தேவை. இவர் ஒரு வாரத்திற்கு எங்கும் பயணம் செய்யாமல் வேலை எதுவும் செய்யாமல் படுக்கையில் படுத்தபடி ஓய்வு எடுக்க வேண்டும். நான் தரும் மருந்துகளை உட்கொண்டால், ஒரு வாரத்தில் குணமடைவார்'' என்றார்.

''இப்படியெல்லாம் ஆகும் என்று நாங்கள் நினைக்கவேயில்லை'' என்று வருத்தப்பட்ட கிருஷ்ணன் விசுவ நாதனை நோக்கி, ''உங்கள் வீட்டில் பெண் பார்க்கப் போகும் நேரத்தில் இவ்வாறு நடந்ததற்கு வருந்துகிறோம். இந்த நிலையில் இவரை எங்கள் கிராமத்திற்கு அழைத்துச் செல்லக்

கூடாது. உங்கள் கிராமத்திலேயே ஏதாவது வீடு பார்த்துக் கொடுங்கள். அங்கே இவரை அழைத்துச் சென்று ஓய்வு எடுக்கச் செய்வோம்'' என்றார்.

அப்போது விசுவநாதனை அவரின் பெண்கள் உள்ளே வரும்படி அழைத்தார்கள். ''தந்தையே, எங்களைப் பார்த்து திருமணம் பேச நம் வீட்டுக்கு வந்தவர் அவர். அவரை நம் வீட்டிலேயே வைத்துக் கொண்டு சிகிச்சை அளிப்போம். அதுதான் நியாயம்'' என்றாள் ஒரு பெண்.

மற்றொரு பெண், ''ஆம் தந்தையே! அவ்வாறு செய்யாவிட்டால், வீடு தேடி வந்த விருந்தாளியை அதுவும் சம்மந்தியாகப் போகிறவரை நிராதரவான நிலையில் தன் வீட்டில் அடைக்கலம் கொடுக்காமல் வெளியே போகச் சொல்லிவிட்டதாக ஊரார் எண்ணுவார்'' என்றாள். விசுவநாதனின் மனைவியும் அவ்வாறே தன் கருத்தைத் தெரிவித்தாள்.

பக்கத்து அறையில் படுத்திருந்த ராமன் விசுவநாதன் பெண்கள் சொல்லிய வார்த்தைகளைக் கேட்டு, மகிழ்ச்சி கொண்டார். தனது மருமகள்களாக வர இருப்பார்களின் நல்ல சுபாவத்தை அறிந்து கொள்ள ஒரு வாய்ப்பு கிடைத்ததைப் பற்றி குதூகலம் அடைந்தார். ஆனால் விசுவநாதன் தன் வீட்டார்கள் பேச்சைக் கேட்காமல் அந்தக் கிராமத்திலேயே ஒரு நல்ல வீட்டைப் பிடித்து அதில் ராமனை ஓய்வு எடுக்கச் செய்தார். ராமனது சிகிச்சையையும் தன்னுடைய பொறுப்பிலேயே வைத்துக் கொண்டார்.

ராமன், கிருஷ்ணன், ரகு, ரவி ஆகியோர் மட்டும் அந்த தனி வீட்டில் தங்கினர். பத்து நாள்களில் ராமன்



குணம் அடைந்தான். இனி திருமணத்தை நிச்சயம் செய்துவிட மறுநாள் விசுவநாதன் வீட்டுக்குச் செல்ல வேண்டியதுதான் என்று ராமனும் கிருஷ்ணனும் பேசிக் கொண்டு இருக்கையில் கிருஷ்ணன் ''ராமா, உன்னுடைய சம்மந்தி விசுவநாதன் மிக நல்ல முறையில் உனக்கு சிகிச்சை அளித்து உதவி செய்தார். ஆயினும் எனக்கு ஒரு விஷயம் விளங்கவில்லை. அவரது பெண்களும் மனைவியும் சொல்லியுங்கூட அவர் ஏன் உன்னைத் தன் வீட்டில் வைத்துக் கொள்ளாமல் வேறு ஒரு தனி வீட்டை ஏற்பாடு செய்தார்?'' என்று கேட்டான்.

அதற்கு ராமன், ''கிருஷ்ணா விசுவ நாதனின் மனைவியும் பெண்களும் மிகவும் நல்ல மனதும் இரக்க குணமும் உடையவர்கள். விசுவநாதனும் அவர் களுக்குக் கொஞ்சமும் குறைந்தவர் அல்ல. அவரும் தங்கமான மனிதர்தான். ஆனால் அதே சமயம் நாட்டு நடப்பும் அறிந்தவர். அவர் மட்டும் என்னைத் தன் வீட்டிலே வைத்துக் கொண்டு இருந்தால் ஊரார் என்ன சொல்வார்கள் தெரியுமா? தன் பெண்களை தலையில் கட்டுவதற்காக விசுவநாதன் இப்படி யொரு நாடகம் நடத்தினான் என்று பேசலாம். தவிர திருமணம் நிச்சயம் ஆவதற்கு முன்பே சம்மந்தி வீட்டில் பல நாள்கள் தங்கியவன் என்ற அவப்பெயர் எனக்கு ஏற்படலாம். அதையெல்லாம் மனத்தில் இருத்தித்தான் விசுவநாதன் மேற்படிச் செய்தார். எனக்கு இந்த சம்பந்தம் பிடித்திருக்கிறது. விசுவநாத னுடைய பெண்கள் தங்கள் சம்மதத்தைத் தெரிவித்தால், இந்தத் திருமணத்தை நிச்சயம் செய்து விடலாம். ரகுவுக்கும், ரவிக்கும் பெண்கள் பிடித்து விட்டதை நான் ஏற்கெனவே அறிவேன்'' என்றார்.

மறுநாள் விசுவநாதன் வீட்டில் கல்யாண நிச்சயதார்த்தம் இனிதாக நடைபெற்றது. திருமணத் தேதியும் குறிக்கப்பட்டது. அந்தத் தேதியில் ரகு, ரவி ஆகியோரின் திருமணமும் இனிது நடைபெற்றது.

ராமனும், கிருஷ்ணனும் எதிர்பார்த்த படியே மருமகள்கள் மிக நல்ல சுபாவம் உடையவர்களாக இருந்தார்கள். அவர்கள் விரும்பிய நிம்மதியான வாழ்க்கையும் கிடைத்தது.



# வளர்ப்பு நாய்களே எமனான கதை



**கா**ட்டுவாசியான ஆக்டியன் என்ற இளைஞன் மின்னலைப் போல் பாய்ந்து ஓடக்கூடியவன். தன்னுடைய ஓடும் திறமையைக் கண்டு தன் மீதே அவனுக்கு கர்வம் உண்டு. அது மட்டும் அல்ல; வேட்டையாடுவதிலும் அவனுக்கு இணை யாரும் இல்லை. வேட்டைக்கென்றே சில வேட்டை நாய்களை வளர்த்து, அ வற்றுக்கு மி கச் சிறப்பான முறையில் பயிற்சியும் அளித்திருந்தான். காட்டில் ஏதாவது ஒரு மிருகத்தைப் பார்த்து, அதன்மீது தன் வேட்டை நாய்களை அவன் ஏவி விட்டால் போதும்! வில்லில் இருந்து விடுபட்ட அம்புபோல் அவை சூறாவளியாகப் பின் தொடர்ந்து அந்த மிருகத்தை உயிருடனோ அல்லது பிணமாகவோ எடுத்து வந்துவிடக் கூடிய ஆற்றல் பெற்றுஇருந்தன.

அதே காட்டில் டயானா என்ற தேவதை வசித்து வந்தாள். ஒருமுறை ஆக்டியன் புயல் வேகத்தில் ஓடு வதைக் கண்டு அவள் பெரிதும் கவரப் பட்டாள். அதேபோல் தானும் காட்டில் ஓட வேண்டும் என்ற ஆசை அவளுக்கு ஏற்பட்டது. ஒருமுறை ஆக்டியன் கண் முன் தோன்றி தன்னை அறிமுகப் படுத்திக்கொண்டு, அவனுடன் காட்டில் ஓடி விளையாட தனக்கிருந்த விருப்பத்தை வெளியிட்டாள்.

ஆக்டியனுக்கு டயானாவின் வேண்டுகோளை கேட்டு மிக்க மகிழ்ச்சி உண்டாயிற்று. தினமும் டயானாவுடன் காட்டில் ஓடி விளையாட ஆரம்பித்தான். டயானா தேவதை என்பதால், முதலில் அவளுடன் மரியாதையாக பழகிய

ஆக்டியனுக்கு நாளடைவில் தலைக் கிறுக்கு உண்டாயிற்று. ''நான் நினைத்தால், உன்னை ஓட்டத்தில் வென்று விட முடியும்!'' என்று கர்வத்துடன் அவளிடமே சவால் விட்டான். டயானா விரும்பினால் அவனைவிட வேகமாக ஓட முடியும். ஆனால் தனது சக்தியை சாதாரண மனிதர்கள் முன் காட்ட அவள் விரும்பவில்லை. ஆக்டியனை எச்சரிக்க வேண்டும் என்று தோன்றியதால், அவள் தன்னிடம் சற்றே பணிவாக நடக்குமாறும், தன்னையோ தன் ஆபரணங்களையோத் தொடக்கூடாது என்றும், தனது எல்லையை மீறவேண்டாம் என்றும் அறிவுரை வழங்கினாள். ஆனால் ஆக்டியன் அவளுடைய எச்சரிக்கைகளைப் பொருட்படுத்தவில்லை.

ஒருநாள் டயானா ஒரு ஏரியில் தனிமையில் குளித்துக் கொண்டு இருந்தாள். அந்த சமயம் ஆக்டியன் அவள் குளிக்கும் இடத்திற்கு வந்தான். உடனே ஒதுங்கிப் போகாமல், அவள் முன் வந்து நின்று கொண்டு அவளுடைய ஆபரணங்களைத் தன் கைகளில் எடுத்துக் கொண்டான். அவனின் வேட்டை நாய்களும் அவனைச் சுற்றி நின்றன.

தான் குளிக்கும் போது நாகரீகமில்லாமல் அங்கு வந்தது மட்டுமல்லாமல் தன் ஆபரணங்களை எடுத்துக் கொண்டதும், டயானாவுக்கு மிகுந்த கோபத்தை உண்டாக்கின.



உடனே ஆக்டியன் ஒரு மானாக மாற அவள் சாபமிட்டாள். அடுத்த கணமே ஆக்டியன் மானாக மாறினான். சுற்றியிருந்த வேட்டை நாய்கள் தனியே ஒரு மானைப் பார்த்தால் சும்மாஇருக்குமா? உடனே பாய்ந்து சென்று மானைத் துரத்தின. ஆக்டியன் அவற்றிடம் இருந்து தப்ப வெகு வேகமாக ஓடினான். ஆனாலும் அவனால் மிகச் சிறப்பாக பயிற்றுவிக்கப் பட்ட நாய்கள் மானை விடாமல் துரத்திச் சென்று, கடைசியில் அதைப் பிடித்து துண்டுதுண்டாகக் கடித்துக் குதறி எறிந்தன. ஒரு சாதாரண மனிதன் ஒரு தேவதையுடன் சில நாள்கள் கொண்டிருந்த நட்புறவுக்கு அன்று முடிவு கிடைத்தது.

# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி

சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.

**கீழ்க்காணும் கதையைப் படியுங்கள்:**



பரமசிவத்தின் குழந்தைகளுக்கு ஏதாவது பறவையை வளர்க்க வேண்டுமென்று ஆசை இருந்தது. ஒருநாள் பரமசிவம் கடைத்தெருவில் ஒருவன் அழகான கிளிகள் விற்பதைப் பார்த்தார். அவற்றுள் ஒன்றை வாங்கத் தீர்மானித்து, விலையை கேட்ட பரமசிவத்துக்கு அதன் விலை நூறு ரூபாய் என்றதும் திகைப்பு ஏற்பட்டது.

''நூறு ரூபாய் மிகவும் அதிகம்'' என்றார் பரமசிவம். ''நீங்கள் தாராளமாக நூறு ரூபாய் கொடுத்து வாங்கலாம். வேண்டுமானால் கிளியிடம் பேசிப் பாருங்கள்!'' என்றான் அவன். பரமசிவம் கிளியிடம் ''உன்னுடைய விலை நூறு ரூபாயா?'' என்றார்.

''ஆமாம்!'' என்று கிளி அழகாகப் பேசியது. உடனே பரமசிவம் நூறு ரூபாயைக் கொடுத்து, கிளியை வாங்கிக் கொண்டார். வீட்டில் குழந்தைகள் கிளியைப் பார்த்து மகிழ்ந்தனர். ஆனால் பரமசிவத்திற்கு தான் மோசம் போய்விட்டோம் என்று தோன்றியது.

- பரமசிவத்திற்கு அவ்வாறு தோன்ற காரணம் என்ன?
- அவர் கிளியைத் திருப்பிக் கொடுத்திருப்பாரா?
- அதற்குப் பதிலாக வேறு ஏதாவது பறவை வாங்கி வந்திருப்பாரா?

உங்கள் விளக்கங்களை 100-150 வார்த்தைகளில் எழுதி ஒரு உறைக்குள் வைத்து அதன் மீது கதைப் போட்டி என எழுதி கீழ்க்காணும் கூப்பனையும் சேர்த்து அனுப்பவும்.

## முடிவு தேதி : ஜூலை 31, 2005

பெயர் ------------------------------------வயது-----------பிறந்த தேதி-----------------

பள்ளியின் பெயர் -----------------------------------------------------------------------------

வகுப்பு-------------------------------வீட்டு முகவரி-----------------------------------------

-----------------------------------------------------------------------------------------------

-----------------------------------------------------------------பின்கோடு--------------------

பெற்றோர் கையொப்பம் கலந்து கொள்வோரின் கையொப்பம்

## சந்தமாமா இந்தியா லிமிடெட்

82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.



# பேராசை

பிரம்மதத்தன் காசியை ஆண்ட போது போதிசத்வர் செருப்புத் தைக்கும் குடும்பத்தில் ஒரு சிறு கிராமத்தில் அவதரித்தார். அவர் பெரியவராகித் தன் குலத்தொழிலைச் செய்து ஒரு சித்த யோகியை அணுகி அவரிடமிருந்து ஒரு அபூர்வ மந்திரத்தைக் கற்றுக் கொண்டார்.

அந்த மந்திரத்தைக் கொண்டு காய் காய்க்காத காலத்தில் கூட மாமரங்களில் மாம்பழங்களை வர வழைத்து அவற்றை விற்று வாழ்ந்து வந்தார். தினமும் காட்டிற்குப் போய் ஒரு மாமரத்தின் அருகே நின்று மந்திரம் ஓதியவாறே அவர் அதன் மீது நீரைத் தெளிக்க அம்மரம் பழங்களாகக் கீழே உதிர்த்து விழச் செய்யும். இவ்வாறு போதிசத்வர் செய்வதை ஒருநாள் சுநந்தன் என்ற அந்தண வாலிபன் பார்த்து விட்டான். அவன் எந்த வேலையும் செய்யாமல் தனக்குப் பணம் வந்து குவிந்து விட வேண்டும் என்று பகல் கனவு காண்பவன். அவன் போதிசத்வர் செய்த அற்புதத்தைக் கண்டதும் அவரிடம் இருந்து அந்த அபூர்வ மந்திரத்தைக் கற்றுக் கொண்டு விடுவது என அவன் தீர்மானித்து அப்போது முதல் போதி சத்வருக்குப் பணிவிடைகள் செய்யலானான். கீழே விழுந்த பழங்களை எடுத்து மூட்டையாகக் கட்டி சுமந்து கொண்டு அவர் பின் நடந்து அவர் வீட்டில் கொண்டு போய் இறக்கினான். அவருடைய வீட்டு வேலைகளை விழுந்து விழுந்து செய்தான்.

இதைக் கண்ட போதிசத்வர் தன் மனைவியிடம் ''இவன் ஏன் இப்படி நமக்கு வேலை செய்கிறான் தெரியுமா? என்னிடமிருந்து அபூர்வ மந்திரத்தைக் கற்றுக் கொள்ளத் தான். இவன் அதனைக் கற்றுக் கொண்டாலும் வெகு சீக்கிரமே அதன் சக்தி இவனிடம் இல்லாமல் போய் விடும்'' என்றார். அவரது மனைவியோ

''பாவம்! எப்படி மாடு போல நம் வீட்டில் உ ழைக்கிறான்! நீ ங்கள் அவனுக்கு மந்திரத்தை உபதேசித்து விடுங்கள். பலிப்பதும் பலிக்காததும் அவனவன் த லை எ ழுத்தைப் பொறுத்தது'' என்றாள்.

போதிசத்வரும் தம் மனைவியின் வற்புறுத்தலின் பேரில் சுநந்தனுக்கு அந்த அபூர்வ மந்திரத்தை உபதேசித்து ''நீ இதனை யாரிடமிருந்து கற்றாய் என்ற ரகசியத்தை வெளியிடக் கூடாது. அப்படி வெளியிட்டால் மறு வினாடியே உனக்கு இந்த மந்திரம் பலிக்காது'' என்றார்.

சுநந்தனும் யாரிடமும் அந்த ரகசியத்தைக் கூறுவதில்லை என உறுதிமொழி அளித்து போதிசத் வரிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றான். அவன் தினமும் நிறைய மாம்பழங்களை மரங்களில் தான் உபதேசம் பெ ற்ற ம ந்திரத்தின் சக்தியால் வரவழைத்து அவற்றை விற்று நிறையப் பணம் அடைந்து வரலானான்.

இவ்வாறு சுநந்தன் வரவழைத்து விற்ற மாம்பழங்களில் ஒன்று காசி மன்னனுக்குக் கிடைத்தது. அவன் மாம்பழக் காலமில்லாத காலத்தில் மிகப் பெரிய ருசியான மாம்பழம் கிடைத்தது க ண்டு ஆ ச்சரியப் பட்டான். அத்தகைய பழம் எங்கே கிடைத்தது என விசாரிக்கலானான். சுநந்தன் தான் அதனை விற்றவன் என்பதை அவன் தன் ஆட்களிடம் இருந்து தெரிந்து கொண்டான்.

அவன் உடனேசுநந்தனைஅழைத்து



விசாரிக்கவே சுநந்தனும் ''என்னிடம் அபூர்வ மந்திரசக்தி உள்ளது. அதனால் இத்தகைய பழங்களை வரவழைக்கி றேன்'' என்று ஜம்பம் அடித்துக் கூறினான். அரசனும் அந்த சக்தியைக் காண விரும்பவே சுநந்தனும் பலர் முன்னிலையில் அரசனின் தோட்டத்திலுள்ள ஒரு மாமரத்தின் முன்போய் நின்று அதன் மீது நீரைத் தெளித்து மந்திரத்தை உச்சரித்தான். மறு வினாடியே அம்மரத்தில் மாம்பழங்கள் தோன்றி கீழே விழுந்தன. இந்த அதிசயத்தைக் கண்டு காசி மன்னன் ஆச்சரியப் பட்டு ''ஆகா! இந்த அற்புத மந்திரத்தை உனக்கு உபதேசித்த மகான் யார்? உடனே சொல்'' என்று கேட்டான்.

சுநந்தன் முதலில் தான் அதனைக் கற்றது போதிசத்வரிடமிருந்து எனச் சொல்ல வேண்டாம் என நினைத்

தான். ஆனால் அரசன் மீண்டும் மீண்டும் கேட்கவே சுநந்தனும் போதிசத்வர் எச்சரித்ததையும் பொருட் படுத்தாமல் தான் அந்த மந்திரத்தைக் கற்றது செருப்பு தைக்கும் குலத்தில் பிறந்த போதிசத்வரிடமிருந்து என்று கூறி விட்டான். இவ்வளவு சிரமப் பட்டு கற்ற மந்திரத்தின் சக்தி திடீரென்று தன்னை விட்டு விட்டுப் போய் விடவா போகிறது என அவன் எண்ணித் தன் குருவின் கட்டளை யையும் மீறி ரகசியத்தை வெளியிட்டு விட்டான்.

காசி மன்னன் ஆச்சரியப் பட்ட வாறே ''அடேயப்பா! தாழ்குலத்தில் பிறந்த ஒருவனுக்கா இவ்வளவு சக்தி! பிராம்மணனாகிய நீ அவனிடம் உபதேசம் பெற்றது பற்றிக் கொஞ்சம் கூட வெட்கப் படவில்லையா? '' என்று கேட்டான். சுநந்தனும் பதில் எதுவும் கூறாமல் தலைகுனிந்தவாறே அங்கிருந்து சென்றான்.

ஓரிரண்டு மாதங்களாயின காசி மன்னனுக்கு மாம்பழம் சாப்பிட வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. உடனே அவன் சுநந்தனை அழைத்து வரச் சொன்னான். சுநந்தன் வந்ததும் காசி மன்னன் அவனிடம் மந்திரத்தை உச்சரித்து முன் செய்தது போல இப்போதும் தனக்கு மாம்பழங்கள் வரவழைத்துக் கொடுக்கும்படிக் கூறினான். சுநந்தனும் மிகவும் கர்வத்தோடு முன் போல அரசனின் தோட்டத்திற்குப் போனான். அவனோடு காசி மன்னனும் மற்றும் பலரும் சென்றார்கள். சுநந்தனும் ஒரு மாமரத்தின் முன் நின்று அதன் மீது நீரைத் தெளித்து மந்திரத்தை உச்சரிக்க முயன்றான். ஆனால் அவனுக்கு மந்திரமே ஞாபகத்திற்கு வரவில்லை.

காசி மன்னனும் மற்றவர்களும் அது கண்டு ஆச்சரியப்பட்டனர். அப்போது சுநந்தன் ''நான் என் குருவின் கட்டளையை மீறினேன். நான் யாரிடமிருந்து இந்த மந்திரத் தைக் கற்றேன் என்ற ரகசியத்தைக் காசி மன்னனிடம் கூறினேன். அதனால் எனக்கு அப்போது முதல் மந்திரம் பலிக்காது போயிற்று'' என்று எல்லாரிடமும் கூறி விட்டு தலைகுனிந்தவாறே தன் வீட்டிற்குச் சென்றான்.





# மகாவிஷ்ணு

குருஷேத்திரத்திர மைதானத்தில் அர்ஜுனன் அமர்ந்திருந்த தேரை சாரதியாக அமர்ந்திருந்த கிருஷ்ணர் ஓட்டிப் போய் இரு படைகளுக்கும் மத்தியில் நிறுத்தினார். போர்களத்தில் இருதரப்பிலும் த ன் ச கோதரர் களையும் மாமன்மார்களையும் மற்றும் பல உறவினர்களையும் கண்டு அர்ஜுனன் கலங்கிப்போய் தன் ை கயிலிருந்த க ாண்டீபத்தை நழுவவிட்டான். அவன் ''இவர்களை எல்லாம் கொன்று நாட்டை அடை வதா? வேண்டாம். நான் போர் புரியமாட்டேன்'' என்றான்.

அப்போது கிருஷ்ணன் ''அர்ஜுனா! போர்களத்திற்கு வந்த பின் போர் புரியமாட்டேன் என நீ சொல்வது அறிவுக்கு உகந்தது அல்ல. நீ உன் கடமையைச் செய். அதன் பலன் தானே ஏற்படும். நாமெல்லாம் காலத்தின் கருவிகள். காலம் நம்மைக் கொண்டு செயல்படுகிறது. அதர்மத்தை எதிர்த்து தர்மத்தை நிலைநாட்டப் போர் புரிவது உன் கடமை. உலகில் ஒவ்வொரு நிமிடமும் எங்காவது போராட்டம் நடந்து கொண்டுதான் இ ருக்கிறது. அதர்மத்தை அழித்து தர்மத்தை நிலைநாட்ட பகவான் அவ்வப்போது அவதாரமெடுக்கிறார். இப்போது நாராயணனான நான் கிருஷ்ணனாக அவதரித்திருக்கின்றேன். நரனாகிய நீ அர்ஜுனனாகப் பிறந்திருக்கிறாய். என் விசுவரூபத்தைப் பார். உண்மை தெரியும்'' என்று தம் விசுவரூபத்தைக் காட்டினார்.

விசுவரூப தரிசனம் கண்ட அர்ஜுனனின் அறிவு தெளிவு



பெற்றது. காண்டீபத்தை எடுத்து அவன் டங்காரம் செய்தான். அம்பு களை எய்தான். பாரதப் போர் நடந்தது. பாண்டவர்கள் வெற்றி பெற்றனர். பீமனும் திரௌபதியும் செய்த சபதங்கள் நிறைவேறின. பீமன் துரியோதனனின் தொடையைப் பிளந்து அவனைக் கொன்றான். திரௌபதி கௌரவர்களின் ரத்தத்தை தன் தலை முடியில் தடவி விரித்த தலைமுடியை முடிந்து கொண்டாள்!

அபிமன்யு வீர சொர்க்கம் அடைந்தான். கர்ணனின் உடல் கவசம் சிவபிரானைச் சென்றடைந்தது. நர நாராயணர்களான அர்ஜுனனும் கிருஷ்ணனும் அவதரித்த நோக்கம் நிறைவேறியது. கிருஷ்ணாவதாரம் எடுத்து மகாவிஷ்ணு பூமியின் பாரத்தைக் குறைத்தது கண்டு பூமாதேவி மகிழ்ந்து அவருக்கு நன்றி செலுத்தினாள்.

பாண்டவ வம்சமே இல்லாது செய்து விட வேண்டுமென அஸ்வத் தாமன் எய்த அஸ்திரத்தின் மகிமை யால் உத்தரை உயிரற்ற குழந்தையைப் பெற்றாள். கிருஷ்ணர் தம் பாதத்தால் அக் குழந்தையை இலேசாக நசுக்கிப் பரீட்சித்து உயிர் இருக்கிறதா எனப் பார்த்து உ யிர் வ ரச் செ சய்தார். இவ்வாறு ப ரீட்சைக்கு ஆ ளான குழந்தை தான் பரீட்சித்து என்று பெயர் பெற்றது.

பாரதப் போர் முடிந்ததும் பீமன் திருதராஷ்டிரனைக் காண வந்தான். தன் மகனைக் கொன்ற பீமனை நசுக்கி விட அவன் துடித்தான். இதை அறிந்த கிருஷ்ணர் முதலில் பீமன் போன்ற இரும்புச் சிலையை திருதராஷ்டி ரனுக்கு அகப்படச் செய்ய திரு திராஷ்ரன் பீமன் என அதை நினைத்து இறுகத் தழுவி நசுக்கினான். அந்த இரும்புச் சிலை நசுங்கித் துண்டு துண்டுகளாகி விழுந்தது.

தன் புதல்வர்கள் அழியக் காரணமாக இருந்த கிருஷ்ணரைப் பார்த்து காந்தாரி ''என் குலம் அழிந்தது போல உன் யாதவ குலமும் அழியட்டும்'' என்று சாபமிட்டாள். கிருஷ்ணரோ சிரித்தவாறு ''அவ்வாறு தான் ஆகப் போகிறது. இதை நான் அறிவேன்'' என்றார்.

பாண்டவர்களுக்கும் திரௌ பதிக்கும் பிறந்த உபபாண்டவர்கள் ஐவரையும் வெட்டிக் கொன்ற

அசுவத்தாமனை கிருஷ்ணனும் அர்ஜுனனும் கட்டி இழுத்து வந்து திரௌபதியின் முன் நிறுத்தி இருந்தார்கள். திரௌபதியும் அவனைப் பார்த்து ''உன் உயரிய வாழ்க்கையை விட்டு மிகக் கீழ்த்தர மான வாழ்வை அடை! இது தான் உனக்கு ஏற்ற தண்டனை'' என்றாள்.

அசுவத்தாமனின் தலையில் இருந்த மணியை கிருஷ்ணர் எடுத்து அப்புறப்படுத்தினார். தலையிலிருந்த மணி போனதும் அசுவத்தாமன் பெருநோயால் அவதிப்பட்டு எங்கோ போய் விட்டான்.

உத்தராயண புண்ணியகாலத்தை எதிர்பார்த்து அம்புப் படுக்கையில் படுத்திருந்த பீஷ்மர் தருமருக்கு ராஜ தர்மம் பற்றி உபதேசித்தார். கிருஷ்ணரைத் துதித்தவாறே உத்த ராயண புண்ணியகாலம் வந்ததும் உயிர்நீத்து மேலுலகம் சென்றார்.

தருமரின் பட்டாபிஷேகம் நடை பெற்றது. கிருஷ்ணரும் அஸ்தினா புரத்திலிருந்து துவாரகைக்குக் கிளம்பிச் சென்றார். தருமர் அசுவமேதயாகம் செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்யலானார். துவாரகையில் யாதவர்கள் சரியான தலைவன் இல்லாததால் தானே தலைவன் எனக் கூறி ஒவ்வொருவனும் தலை தெரியாமல் துள்ளினான். பாரதப் போர் ஆரம்பிக்கும் முன்பே பலராமர் தீர்த்த யாத்திரை செய்ய துவாரகையை விட்டுக் கிளம்பி விட்டார்.



கிருஷ்ணரும் மற்ற யாதவப் பிரமுகர்களும் பாரதப் போரில் கலந்து கொள்ளப் போய் விட்டார்கள்.

அவர்கள் சாம்பனை கர்ப்பமுற்ற பெண் போல வேடம் அணியச் செய்து ''இவளுக்கு ஆண் குழந்தை பிறக்கும் பெண் குழந்தை பிறக்கும்'' என்று கூறி கேலி செய்தார்க்ள. அச்சமயம் துர்வாசர் முதலிய முனிவர்கள் வரவே அவர் முன் பெண் வேடத்திலிருந்த சாம்பனை நிறுத்தி ''மாமுனியே! இவளுக்கு என்ன குழந்தை பிறக்கும்? '' என்று கேட்டார்கள்.

அது கண்டு துர்வாசருக்குக் கோபம் வந்தது. ''மடையர்களா! உங்கள் குலத்தையே அழிக்க ஒரு நுகத்தடித் தான் பிறக்கும்'' எனக் கூறிவிட்டுப் போய்விட்டார் அவர். யாதவர்கள்



அது கேட்டுச் சிரித்தார்கள். ஆனால் சாம்பன் தன் வேடத்தைக் கலைத்த போது தன் மடியிலிருந்து சிறு உலக்கை போல நுகத்தடி கீழே விழுந்ததைக் கண்டு திகைத்தான். அப்போது யாதவர்களுக்கும் பயம் தோன்றியது. கிருஷ்ணர் துவாரகைக்கு வந்ததும் அவர்கள் நடந்ததை எல்லாம் கூறி நுகத்தடியையும் காட்டினார்கள். கிருஷ்ணர் அதனைப் பொடியாக்கி அதனை உருத்தெரியாதவாறு செய்து விடுமாறு அவர்களிடம் கூறினார்.

யாதவர்கள் அந்த நுகத்தடியை பல ஆயிரம் கோசங்கள் தொலைவிலுள்ள யமுனை ந திக்கரைக்கு எ டுத்துப் போய் அதனைத் தேய்த்தனர். அது தேய்ந்து கடைசியில் மிகச் சிறியதாக ஆகிவிடவே அதனைத் தூக்கி நதிக்குள் எறிந்தனர். அந்தச் சிறிய மரத்துண்டை ஒரு மீன் விழுங்கியது. அந்த மீனை ஒரு வேட்டைக்கார ன் பிடித்தான். அந்த மீனின் வயிற்றில் கிடைத்த சிறு மரத்துண்டு கொழுப்பு சேர்ந்ததாக இருந்தது. அந்தக் கொழுப்பை தன் அம்பு நுனியில் தடவி அந்த மரத்துண் டையும் தன் அம்பு ஒன்றில் பொருத்திக் கொண்டான்.

யமுனை நதியில் கரைத்த நுகத்தடியின் பொடி ஒரு மணல் திட்டில் போய்ப் படிந்து கோரைப் புல்லாக உயர்ந்து அடர்ந்து வளர்ந்தது. ஒரு நாள் துவாரகையிலிருந் து யாதவர்கள் எல்லாரும் யமுனை நதிக்கரைக்குச் செல்ல கிளம்பி னார்கள். நெடுந்தூர பயணத்தின் போது அது ஆடிப்பாடிக் குதித்துக் குதித்தவாறே ஒருவரையொருவர் திட்டி அடித்து உதைத்துக் கொண்டனர். இதுவே பெருஞ் சண்டையாகி ஒருவரையொருவர் கொன்று இறந்து விழுந்தார்கள். இப்படியாக ஒருவர் கூட மீதமா காமல் இறந்தனர்.

கிருஷ்ணாவதாரத்தின் காரணத் தையும் அதன் மகிமையையும் அறிந்த கிருஷ்ணரின் தம்பிகளில் ஒருவரான உத்தவர் மட்டுமே இறக்காமல் இருந்தார். பலராமர் நடந்த கோர சம்பவத்தைக் கேட்டதும் விரக்தி அடைந்து யோகத்தில் அமர்ந்து தனது உடலை விட்டொழித்து வைகுண்ட லோகம் போய்ச் சேர்ந்தார்.

துவாரகையிலுள்ள ஆண் பெண்

குழந்தைகள் எல்லாரையும் அழைத்துக் கொண்டு அ ங்கிருந்து வெளியேறி வந்து விடும் படி அர்ஜுனனிடம் கிருஷ்ணர் கூறினார். ஏனெனில் இன்னும் ஏழு நாள்களில் அதனை சமுத்திரராஜனிடம் ஒப்படைத்தாக வேண்டும்.

கிருஷ்ணர் உத்தவருக்குப் பல தத்துவங்களை உபதேசித்தார். தனது விஷ்ணு உருவைக் காட்டினார். பின்னர் உத்தவர் என்ன செய்ய வேண்டும் என்பதையும் கூறினார். யாதவர்கள் அழிந்ததும் கிருஷ்ணராக வந்த ே வலையும் வி ஷ்ணுவுக்கு முடிந்தது. பூமியின் பாரம் குறைந்தது.

கிருஷ்ணர் யமுனை நதிக்கரைக்குப் போய்த் தன் குழலோசையால் இனிய கானத்தைப் பரப்பினார். யமுனை நதி புளகாங்கிதம் அடைந்தது. கிருஷ்ணர் ஒரு மரத்தடியே அமர்ந்து கால்மேல் கால் போட்டுக் கொண்டு இளைப் பாறிக் கொண்டிருந்தார் . நுகத்தடி மரத்துண்டை அ ம்பில் ை வத்த வேடன் தொலைதூரத்திலிருந்து ஏதோ ஆடுவது கண்டு மான் என எண்ணித் தான் தயாரித்த அந்த அம்பை எய்தான். நுகத்தடியின் துண்டு கிருஷ்ணரின் காலில் தைத்து ரத்தம் பீறிட்டது.

கிருஷ்ணர் ஒரு முறை துர்வாசர் தம் உடல் முழுவதிலும் பாயாசத்தைப் பூசும்படிக் கூறவே கிருஷ்ணரும் அவ்வாறு செய்தார். அப்போது அவரது பாதங்களில் கிருஷ்ணர் பாயாசத்தைப் பூசவில்லை. அதனால் துர்வாசர் ''உன் பாதத்தின் வழியாகத்



தான் உனக்கு அழிவு ஏற்படும்'' எனக் கூறினார். அதன்படி வேட்டைக்காரன் எய்த அம்பு அவரது உயிரைப் போக்கக் காரணமாயிற்று. தான் அடித்த மானை எடுத்துப்போக வந்த வேடன் மானுக்கு பதிலாக கிருஷ்ணர் இருப்பது கண்டு திகைத்தான். அவரும் ''நீ முன் பிறப்பில் அங்கதன். உன் தந்தை வாலியை நான் மறைந்திருந்து கொன்றேன். நீயும் என்னை மறைந்திருந்து கொன்றாய். பதிலுக்கு பதில் நீ செய்தாகிவிட்டது'' எனக் கூறித் தன் முந்தைய ராமாவதாரத்தைக் காட்டினார். பின்னர் அவ்வேடனுக்கு மேலுலகப் பதவி அளித்தார்.

கிருஷ்ணரின் தேரோட்டி தாருகன் அவரைத் தேடிக் கொண்டு வந்தான். அவன் கிருஷ்ணரின் நிலைக் கண்டு கதறினான். அவரும் ''நீ இப்போதே துவாரகைக்குப் போய் அங்கு உள்ளவர்களை வெளியேறச் செய்'' என்று கூறி அனுப்பினார்.

அதன்பின் கிருஷ்ணர் தன் புல்லாங்குழலை எடுத்து இன்னிசையை எங்கும் பரப்பினார்.

பின்னர் தம் பூத உடலைவிட்டு விஷ்ணுவின் உருவில் வைகுண்ட லோகம், சென்று ஷேசயனத்தில் ஆனந்தமாக படுத்துக்காட்சி அளித்தார்.

யமுனை நதிக்கரை விரிச்சோடிக் கிடந்தது. கிருஷ்ணர் வைகுண்டம் அடைந்த மறு வினாடியே கலியுகம் ஆரம்பமாகி விட்டது. உத்தவர் கிருஷ்ணரின் தத்துவங்களையும் உபதேசங்களையும் எல்லாருக்கும் எடுத்துரைத்தார். அவை யாவும் பகவத்கீதையில் இருப்பதைக் காணலாம்.

கிருஷ்ணர் பூபாரத்தைக் குறைத்து துஷ்டர்களை அழித்து நல்லவர்களைக் காத்தார். உலகிற்கே அரிய பொக்கிஷமாய் பகவத்கீதையை அளித்தார். அதர்மம் ஓங்கும் போது தர்மத்தைக் காக்க தான் அவ்வப்போது அவதரிப்பதாகக் கூறி எல்லாருக்கும் ஆறுதல் அளித்தார். இப்படிப்பட்ட கீதாசரியரின் மகிமையை என்னவென்று கூறுவது என சூதர் கிருஷ்ணாவதாரப் பெருமையைக் கூறி முடித்தார்.





# தொலைந்து போன மோதிரம்

**சோ**மன், ராமன் என்ற இரண்டு ஆட்கள் ராஜாவிடம் பணி புரிந்து வந்தனர். ராமனைக் கண்டால் மிகவும் பிடித்த ராஜாவுக்கு, என்ன காரணத் தினாலோ சோமனைக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை.

ஒருநாள் ராஜா இருவரையும் அழைத்து ''நீங்கள் இருவரும் விடு முறை எடுத்துக் கொண்டு உங்கள் வீட்டுக்குச் செல்லுங்கள். மூன்று நாள்கள் க ழித்து ந மது அ ரண் மனையில் நடக்கவிருக்கும் விழா விற்குக் கட்டாயம் வந்து விடுங்கள். உங்களுக்காக சிறு பரிசுகள் எடுத்து வைத்திருக்கிறேன். அவற்றை எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று சோமனுக்கு ஒரு சேனைக் கிழங்கும், ராமனுக்கு ஒரு கருங்கல்லும் பரிசாக அளித்தார். இருவரும் ர ாஜாவுக்கு வ ணக்கம் தெரிவித்து விட்டு தங்கள் வீடுகளை நோக்கிச் சென்றனர்.

இருவரும் திரும்பிச் செல்லு கையில் ராமன், ''ராஜா எனக்கு எதற்காக ஒ ரு க ல்லைப் ப ரிசாகக் கொடுத்தார் என்று தெரியவில்லை'' என்று முணுமுணுத்தான். உடனே சோமன், ''அப்படிச் செய்யாதே! உனக்குப் பிடிக்கவில்லையானால், அதை என்னிடம் கொடுத்து விடு. இந்த சேனைக் கிழங்கை நீ எடுத்துக் கொள்'' என்றான். ராமனும் கல்லைக் கொடுத்து விட்டு, மகிழ்ச்சியுடன் சேனைக் கிழங்கை எடுத்துக் கொண்டான்.

ராமன் தான் எடுத்துச் சென்ற சேனைக் கிழங்கை தன் வீட்டில் சமைத்து சாப்பிட்டான். சோமன் தான் எடுத்துச் சென்ற கல்லை அன்றிரவு நிலா வெளிச்சத்தில் உற்று நோக்கி னான். கல்லில் ஏதோ விரிசல் தென் பட, அதனுள் ஏதோ பளிச்சென்று தெரிந்தது. உடனே சோமன் கல்லை உடைக்க, அதனுள் ஒரு தங்க நகை தென்பட்டது. ''ஆகா! ராமனுடன் பரிசுப் பொருட்களை மாற்றிக் கொண்டதால் ராமனுக்கு கிடைக்க



இருந்த தங்க நகை எனக்குக் கிடைத்து விட்டது!'' என்று சோமன் மனதுள் நினைத்துக் கொண்டான்.

மூன்று நாள்கள் கழித்து, இருவரும் அரண்மனை திரும்பி, அங்கு நடந்த விழாவில் பங்கெடுத்துக் கொண்டனர். சோமன் தைரியமாக தங்க நகையை கழுத்தில் அணிந்து கொண்டிருந்தான். அவன் சூடியிருந்த நகை ராஜாவின் கண்களில்பட அவர் சோமனைப் பார்த்து, ''உனக்கு தங்க நகை எங்கிருந்து கிடைத்தது? '' என்றார். உடனே சோமன் தாங்கள் பரிசுப் பொருட்களை மாற்றிக் கொண்டதை ஒப்புக் கொண்டு விட்டான். ராஜா உடனே ராமனையும் வரவழைத்து விசாரிக்க, ராமனும் உண்மையை ஒப்புக் கொண்டான்.

ராஜா ராமனை மன்னித்து விட்டார். ஆனால் சோமன்மீது அவருக்கு அடங்காத கோபம் உண்டாயிற்று. சோமனை நோக்கி, ''உன்னையும் நான் மன்னித்து விடுகிறேன். நீ உண்மையை தயங்காமல் ஒப்புக் கொண்டாய்! மிக்க மகிழ்ச்சி! நான் இப்போது உனக்கு ஒரு மோதிரம் தருகிறேன். ஒரு வாரம் இதை பத்திரமாக வைத்திரு. நான் கேட்கும் போது திருப்பிக் கொடு! ஆனால் மோதிரத்தைத் தொலைத்தால் உனக்கு மரண தண்டனை கிடைக்கும்'' என்றார்.

தன்னைப் பழிவாங்கவே ராஜா இப்படி ஒரு நாடகம் போடுகிறார் என்று சோமனுக்குத் தெரிந்து விட்டது. இருந்தும் பதில் பேசாமல் மோதிரத்தை வாங்கிக் கொண்டான். வீட்டுக்குச் சென்றதும் யாருக்கும் தெரியாமல் குடிசையின் மண் சுவரில் பள்ளம் தோண்டி, அதற்குள் மோதிரத்தை ஒளித்து வைத்து, அதை மூடி விட்டான். இரண்டு நாள் கழித்து, சோமன் வீட்டில் இல்லாத போது ராஜா சோமனின் மனைவியை அழைத்து, ''உன் கணவன் உன் வீட்டில் ஒரு மோதிரத்தை எங்கோ ஒளித்து வைத்திருக்கிறான். அதை நீ எப்படியாவது எடுத்துக் கொண்டு வந்து என்னிடம் கொடுத்தால், உனக்கு நிறைய பொற்காசுகள் தருவேன்'' என்று உத்தரவிட்டார்.

வீடு திரும்பிய சோமனிடம் அவன் மனைவி, ''உங்களிடம் ஒரு மோதிரம் இருந்ததே, அதை எங்கே வைத்திருக்கிறாய்?'' என்று கேட்டாள். 'அடடா! நாம் மோதிரம் கொண்டு வந்ததை

இவள் பார்த்து விட்டாள் போலிருக்கிறது' என்று நினைத்த சோமன், ''ஓ! அதுவா! அதை இங்கே ஒளித்து வைத்திருக்கிறேன்!'' என்று அது ஒளிக்கப்பட்டிருக்கும் இடத்தை மனைவிக்குக் கூறிவிட்டான். சோமன் வீட்டில் இல்லாத சமயம் அவள் மோதிரத்தை எடுத்து ராஜாவிடம் கொடுத்து விட்டாள். ராஜாவும் வாக்களித்தபடி அவளுக்குப் பொற்காசுகளைப் பரிசாக அளித்தார்.

ஒரு வாரம் கழிந்தது. ஒருநாள் அரண்மனையிலிருந்து சோமனை மோதிரத்தைக் கொண்டு வரச் சொல்லி உத்தரவு வந்தது. சோமன் தான் ஒளித்து வைத்த இடத்தில் அதைத் தேடி அது காணவில்லை. பயத்தாலும், அதிர்ச்சியினாலும் பரபரப்படைந்த சோமன் தன் மனைவியைக் கூப்பிட்டு, ''அந்த மோதிரம் எங்கே போயிற்று?'' என்று கத்தினான். கணவனின் கோபாவேசத்தைக் கண்டு பயந்து போன அவன் மனைவி ''எனக்கு ஒன்றுமே தெரியாது!'' என்று பொய் சொல்லி விட்டாள். சோமனுக்குத் தலையில் இடி விழுந்தது போல் இருந்தது.

குனிந்த தலையுடன் ராஜாவின் முன் சென்று, ''ராஜா, அந்த மோதிரம் காணாமற்போய் விட்டது'' என்றான் சோமன். அந்தப் பதிலை எதிர்பார்த்த ராஜா, ''அப்படியானால் இப்போதே உனக்கு மரண தண்டனை!'' என்று அறிவித்தான்.

''ராஜா, எனக்கு ஒருநாள் அவகாசம் கொடுங்கள். நாளைக்கு தண்டனையை நிறைவேற்றுங்கள்!'' என்று சோமன் வேண்ட, ராஜாவும் சம்மதித்தான்.

மிகவும் விரக்தி அடைந்த சோமன்,



ஆற்றங்கரைக்குச் சென்றதும் 'இன்றே என் வாழ்க்கையின் கடைசி நாள். இன்று வயிறார சாப்பிடுவோம்' என்று தோன்ற, ஆற்றில் தூண்டி லிட்டு ஒரு பெரிய மீனைப் பிடித் தான். அந்த மீனை வீட்டுக்கு எடுத்துச் சென்று, இரவு அதை சமைப்பதற்காக கத்தியால் அதை வெட்டியதும் வயிற்றிலிருந்து, தொலைந்து போன அதே மோதிரம் அகப்பட்டது.

உடனே வெறி பிடித்தவன் போல் ''நான் மரண தண்டனையிலிருந்து தப்பி விட்டேன்!'' என்று மகிழ்ச்சி யுடன் கூவிக் கொண்டே அரண்மனை யை நோக்கி ஓடினான். அவனுடைய செய்கையைக் கண்டு வியந்த பலரும் அவன் பின்னாலேயே தொடர்ந்து சென்று அரண்மனைக்குள் நுழைந் தனர். தன்னைச் சுற்றிலும் மக்கள் கூட்டம் திரள, ராஜாவை அணுகிய சோமன், ''ராஜா, ராஜா! இதோ பாருங்கள் நீங்கள் கொடுத்த அதே மோதிரம்! என்னுடைய தண்ட னையை ரத்து செய்யுங்கள்'' என்று கூவினான். பலரது முன்னிலையில் சோமன் அந்த மோதிரத்தைக் காட்டியதும் ராஜா திகைத்துப் போனார். 'என்ன மந்திர ஜாலம் செய்து மோதிரத்தைக் கொண்டு வந்தான்? ' என்று ராஜா ஆச்சரிய மடைந்தார். வேறு வழியின்றி அவன் தண்டனையை ரத்து செய்தார் ராஜா.

உண்மையில் அந்த மோதிரம் மீனின் வயிற்றுக்குள் எப்படிச் சென்றது தெரியுமா? சோமனின் மனைவி தனக்குக் கொடுத்த மோதிரத்தை அரண்மனையில் ஓரிடத்தில் பதுக்கி வைக்க, அன்றிரவு அதை ஒரு எலி எடுத்துக் கொண்டு போய் சாக்கடையில் போட்டு விட்டது. பிறகு சாக்கடை நீர் மோதிரத்தை அடித்துக் கொண்டு சென்று ஆற்றில் சேர்த்துவிட, ஆற்றிலுள்ள ஒரு பெரிய மீன் அதை விழுங்கி விட, அதிருஷ்டவசமாக அதே மீனை அன்று சோமன் பிடித்தான். ராஜாவுக்கு இந்த நிகழ்ச்சிகள் தெரியாது என்பதால், ஏதோ மந்திரம் செய்து சோமன் தன்னிடம் இருந்த மோதிரத்தைத் திரும்பப் பெற்று விட்டான் என்றே நம்பினார்.



இந்தியாவில் அறிந்திராத இடங்கள்

# செட்டிநாடு

தமிழகத்தில் செட்டியார் வகுப்பினைச் சேர்ந்தவர்கள் பழங்காலத்திலிருந்தே வணிகத் துறையில் ஈடுபட்டிருப்பவர்கள். இவர்களில் நகரத்தார் அல்லது நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் என்று ஒரு பிரிவு உண்டு. இந்தப் பிரிவைச் சேர்ந்தவர்கள் புதுக்கோட்டை அருகேயுள்ள மானாமதுரை, கானாடுகாத்தான், காரைக்குடி போன்ற இடங்களில் மிக அதிகமாக இருந்து வருகிறார்கள். காரைக்குடியை மையமாகக் கொண்ட இந்தப் பகுதிக்குச் செட்டிநாடு என்று பெயர். இந்த நாட்டுக்கோட்டை செட்டியார்களின் வீடுகளைப் பார்த்தால் திகைத்துப் போய் விடுவீர்கள். ஒவ்வொரு அரண்மனை போன்ற வீட்டிலும் ஜன்னல்கள் மட்டும் ஆயிரத்திற்கும் மேல் இருக்கும் என்றால் நம்புவீர்களா? ஒவ்வொரு வீடும் மிக அழகான ஓடுகளும், பர்மா நாட்டுத் தேக்கு மரக் கதவுகளையும் கொண்டு நம்மை பிரமிக்கச் செய்கின்றன. கட்டடப் பொருட்களைத் தயாரிக்கவென்றே அத்தன்குடி எனும் கிராமத்தில் ஏற்பாடுகள் செய்யப்பட்டு, சிமெண்ட், மணல், தண்ணீர் கொண்டு மிக அழகான தளங்களும், கூரைகளும் செய்யப்பட்டனவாம்! மிக அழகாக இழைத்துச் செய்யப்பட்ட தளங்களில், கால் வைத்து நடக்கும்போதே அவை எவ்வளவு நளினமானவை என்பதை அறிந்து கொள்ள முடியும். சுண்ணாம்புடன், வெல்லம், முட்டை ஓடுகள், முட்டைகளின் வெண்கரு ஆகியவற்றைக் கலந்து செய்யப்பட்ட சுவர்கள் மிகவும் வழவழப்பாக அற்புதமாக அமைந்திருக்கும். இத்தகைய பிரம்மாண்டமான அழகிய மாளிகைகளை அவர்களால் எவ்வாறு உருவாக்க முடிந்தது தெரியுமா? செட்டியார்கள் உள் நாட்டிலும் கடல் கடந்தும் வாணிபம் செய்து ஈட்டிய பொருள் கொண்டு உருவாக்கப் பட்டவை. இத்தகைய நாட்டுக்கோட்டை செட்டியார்களின் பாரம்பரிய சிறப்புகள் சமீபத்தில் ஜெர்மனியில் உலகறிய பிரகடனப் படுத்தப்பட்டன.



# சூர்யா

24

நயவஞ்சகமாக சாந்திபுர ராஜ்ஜியத்தின் அரியணையைக் கவர்ந்த வீரசிம்மன் தனது ஆட்சியைப் பலப்படுத்த செய்த முயற்சிகள் வீணாயின. கனகதுர்கா தேவியின் தங்க விக்கிரகத்தை அபகரிக்கும் முயற்சியிலும் தோல்வி அடைகிறான். ராஜகுமாரி சுகன்யாவை மணம் புரியும் முயற்சியிலும் தோல்வி அடைகிறான். இதற்கெல்லாம் காரணம் இளவரசன் சூர்யாதான் என்று புரிந்து கொள்கிறான். புரட்சிக்காரர்களின் தலைவன் வசந்தன் ஜெயானந்த முனிவரை சந்திக்கிறான்.

வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்

ஓவியம் : காந்தி அய்யா

திரும்பிச் செல்லவிருந்த வசந்தனை ஜெயானந்தர் மீண்டும் அழைக்கிறார்.

உனக்கு சேனையைத் திரட்ட பணம் தேவைப் படுமே!''

சுவாமி! என்னுடைய வீரர்களிடமே எவ்வாறு நான் பணம் கேட்க முடியும்? அது ஒரு பெரிய பிரச்சினை தான்!

சாந்தி புரத்தில் நீ தேடும் பணம் ஒளிந்து உள்ளது!

புரிகிறது! கனகதுர்கா தேவி உனக்கு அருள் செய்வாள்!

சுவாமி! சாந்திரபுரத்திலேயே செல்வம் இருந்தால், அது ஏன் வீரசிம்மனுக்கு கிடைக்கவில்லை?

நியாயமான வழியில் சேர்ந்த பணம் நேர்மையானவர்களைத் தான் சென்று சேரும்!

சாந்திபுரத்தின் சிதிலமடைந்த பழைய கஜானாவின் இருப்பிடம் உனக்குத் தெரியுமா? உனக்குத் தேவையான பணம் அங்கே கிடைக்கும்.

சூர்யாவை உன்னுடன் அழைத்துச் செல்!

நான் சென்று கண்டு பிடிக்கிறேன்!

வசந்தன் விடை பெற்றுச் செல்கிறான்.

மாலையில் அவனுடன் சேர்ந்து கொள்வேன்!



சாந்திபுரத்தில் வீரசிம்மனுக்கு தூக்கம் பிடிக்கவில்லை.
இந்த இளவரசன் சூர்யா யாராயிருக்கக் கூடும்? மன்னர் சாந்தி தேவரும், ராணியும், இளவரசனும் ஏற்கெனவே இறந்து விட்டனரே!
ஒருநாள் காலையில்...
மகாராஜா! நமது பிரதம ஒற்றர் வந்துள்ளார்!
உள்ளே அனுப்பு!
இந்த சூர்யா யார் என்று கண்டு பிடித்தாயா?
இல்லை மகாராஜா! நான் மற்றொரு தகவல் கொண்டு வந்து உள்ளேன்!
பழைய கஜானா இருந்த இடத்தில் சில புத்தத் துறவிகளைப் பார்த்தேன். அவர்கள்....
யார் அவர்கள்?
புத்தருடைய காலடித் தடங்களைத் தேடுகின்றனராம்! ஆனால் தினமும் அந்த இடத்தையே சுற்றி வருகிறார்கள்!
உண்மையில் புத்தத் துறவிகளோ, என்னவோ! எதற்கும் ஒரு கண் வைத்திரு!
சேனாதிபதியை உடனே அழைத்து வா!
ஆகட்டும் மகாராஜா!
ஜபர்! நமது பழைய கஜானாவை நாம் இது வரைத் தேடிக் கண்டு பிடிக்கவில்லை!
இன்று இரவு அதைத் தேடலாமா?
நள்ளிரவில் இரண்டு குதிரைகள் மேற்கு திசையில் விரைவாகச் செல்கின்றன.


வீரசிம்மனும் ஜபரும் இருளில் சுற்றியலைகிறார்கள். பூட்டப்பட்ட ஓர் அறையைப் பார்க்கின்றனர்
ஜபர்! பூட்டை உன்னால் திறக்க முடியுமா?
முயற்சி செய்கிறேன், மகாராஜா!


ஜபர் பூட்டை உடைக்கிறான். அறையும், அதனுள் இருந்த பெட்டிகளும் காலியாக உள்ளன.
இங்கு ஒன்றுமில்லை, மகாராஜா!


பக்கத்து அறையில் இலேசாகத் திறந்திருந்த ஜன்னல் வழியே நிலவொளியில் ஏராளமான பொன்னும், வெள்ளியும் குவிந்திருப்பதைப் பார்க்கின்றனர்.
ஆகா! தங்கம்... வெள்ளி! இவை என்ன?
ரத்தின கற்கள் மகாராஜா! இந்த செல்வத்தைக் கொண்டு நாம் ஆயுதங்களை வாங்கிக் குவித்து விடமுடியும்.


திடீரென ஓர் உருவம் தோன்றுவது போல் பிரமை ஏற்படுகிறது.
சாந்திதேவரைப் போல் இருக்கிறது! அவருடைய ஆவியா?
உளறாதே! இது உன் மனப்பிரமை!


சரி வா! செல்வோம்! ஆனால் இந்த செல்வத்தை பத்திரமாக பாதுகாக்க வேண்டும்!
காவலுக்கு ஆள் போட்டு விடலாம்!


ஜபர், இரவில் வரலாம் என்று நீதான் சொன்னாய்! இப்போது நீயே பயப்படுகிறாய்!
அது... சாந்திதேவரைப் போலவே... அவரது ஆவிதான்!
தொடரும்.

# குதுப்மினார்



குதுப்மினார் டெல்லி நகரத்தில் இருந்து 10 மைல் தூரத்தில் தென் திசையில் அமைந்துள்ளது. இதன் கட்டுமானப் பணி கி.பி.1200ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. இதனுடைய உயரம் சுமார் 238 அடி. ஐந்து அடுக்குகளைக் கொண்ட குதுப்மினாரில் மொத்தம் 378 படிகள் உள்ளன. அடிப்பாகத்தின் சுற்றளவு 47 அடி. இக்கட்டடம் சிவப்பு, பளிங்கு கற்களால் கட்டப் பட்டதாகும். அடிப்பாகத்தின் 20 வரிசைகளும் உருண்டை, முக்கோணம் என மாற்றி மாற்றி அமைந்திருக்கும். குத்புதின் உருவாக்கத் தொடங்கிய கட்டடம், பிரோஸ்ஷாவால் முடிக்கப் பட்டது.

குதுப்மினாரின் உச்சியில் தொடக்கத்தில் மகுடம் போன்ற ஒரு அமைப்பு இருந்ததாம். 1803ஆம் ஆண்டு நிகழ்ந்த பூகம்பத்தில் அது இடிந்து விழுந்து விட்டதாம். குதுப்மினாருக்கு அருகிலேயே நான்காம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு இரும்பு ஸ்தம்பம் உள்ளது. இதன் சுற்றளவு 16 அங்குலமும், உயரம் 23 அடி 8 அங்குலமும் ஆகும். இந்த ஸ்தம்பத்தில் சந்திரகுப்த விக்கிரமாதித்தனின் புகழுரைகள் பொறிக்கப் பட்டுள்ளன.

## உங்கள் விஞ்ஞானம்

### குளோனிங்

டாலி என்ற பெயருள்ள ஒரு ஆடு உலகில் பரபரப்பை உண்டாக்கியது. முதன் முதலாக செயற்கை முறையில் மனிதனால் உருவாக்கப்பட்ட உயிரினம் தான் இந்த டாலி என்ற ஆடு. டாலி அச்சாக அதன் தாய் போலவே உருவாக்கப்பட்டது. டாலி ஆடு தந்தையின் உதவியின்றியே செயற்கை யாக உருவாக்கப்பட்டது. ஒவ்வொரு உயிரினமும் தோன்றும்போது தன் தந்தையிடமிருந்து பாதி உயிரணுக் களையும், மீதியைத் தாயிடமிருந்தும் பெறுவதால் தாய் தந்தை இருவருடைய உருவ அமைப்புகளையும், குணாதிசயங் களையும் கலந்து கொண்டு இருக்கும். 'குளோனிங்' முறையில் ஒரு மிருகத்திடமிருந்து உயிரணுக்களை எடுத்து, மற்றொரு மிருகத்தின் சினை முட்டைகளிலுள்ள DNAயை அகற்றி சேர்க்கும்போது செயற்கையாக உருவாகும் மிருகம் எந்த மிருகத்தின் உயிரணுக்களின் DNAயைப் பெறு கிறதோ, அதைப் போலவே அச்சாகத் தோன்றும். இந்த முறையில் தான் டாலி உருவாக்கப்பட்டது.



## உங்கள் சுற்றுப்புறம்

### ஆழ்கடல் உயிரினங்கள்



ஆழ்கடலில் வசிக்கும் திமிங்கிலம், டால்ஃபின், சுறா போன்றவற்றால் கடலின் நீலநிறத்தைக் காண முடிவ தில்லை. ப ழங்காலத்தில் க டற்கரை எங்கும் பாறைகளும், மணலும், தூசியுமாக நிரம்பியிருந்ததால், ஆழ் கடல் உயிரினங்களின் கண்களுக்கு அவற்றின் நிறம் மட்டுமே மூளையில் பதிந்து, நீல நி றத்தை அ டையாளம் கண்டு கொள்ள மு டியாமலே போய் விட்டது. மனிதர்களாகிய நமக்கு பலவித வண்ணங்களைத் தெளிவாக அறிந்து கொள்ளும் சக்தி உள்ளது. இந்த சக்தி பல மிருகங்களுக்குக் கிடையாது. உதாரணமாக மாடுகளுக்கு சிவப்பு வண்ணம் சி வப்பாகவே தோன்று வதில்லை. ஆழ்கடலில் வாழும் உயிரினங்களுக்கு வண்ணங்களை பார்த்து உணரும் சக்தி இல்லாவினும், மனிதர்களைக் காட்டிலும் கண் பார்வை தெளிவாக உள்ளது. கலங்கிய நீரில் கூட, நீரின் அடியிலிருப்பவற்றைத் தெளிவாகக் காண அவற்றால் முடியும்.

# உங்கள் பக்கங்கள் உங்கள் பக்கங்கள்

## உங்களுக்குத் தெரியுமா?

### முட்டை உடையாமல் அடைகாக்கும் அதிசயம்!

ஒரு முட்டையின் மீது நாம் உட்கார்ந்தால் உடனே முட்டை உடைந்து நொறுங்கிவிடும். ஆனால் பெட்டைக் கோழி பல நாள்கள் முட்டையின் மீது அமர்ந்து அடை காக்கும் போது முட்டை உடைவது இல்லை. இ து ஏன் தெரியுமா? முட்டையின் வடிவம்தான் அதற்குக் காரணம்! முட்டை சரிசமமான உருண்டை வடிவம் கொண்டதில்லை. ஒருபுறம் பெரியதாகவும், மறுபுறம் சிறியதாகவும் காணப் படும். பெட்டைக் கோழி அடை காக்கும் போது, பெரிய பகுதி கீழேயும், சி றிய ப குதி மேல் நோக்கியும் இருக்குமாறு வைத்து, அதன் மீது அமர்கிறது. அவ்வாறு உட்காரும் போது, கோழியின் எடை முட்டையை பாதிப்பதில்லை. ஆனால் இந்த ரகசியம் பெட்டைக் கோழிக்கு எப்படித் தெரியும் என்பது தான் அதிசயம்!



## நம் இந்தியா

### விஞ்ஞானத்தின் வளர்ச்சி

1. இந்தியாவில் முதன் முதலாகச் செலுத்தப் பட்ட ஏவுகணையின் பெயர் என்ன? அது எந்த இடத்திலிருந்து விண்ணில் செலுத்தப்பட்டது?





2. இந்தியாவின் அதிவேகக் கணினியை உருவாக்கிய ஆராய்ச்சிக் கழகத்தின் பெயர் என்ன?

3. தான் செய்த கணித ஆராய்ச்சிக்குத் தன் மகளின் பெயரைச் சூட்டிய இந்திய விஞ்ஞானி யார்?





4. மஹாவீராச்சாரியா என்பவர் யார்? அவர் இயற்றிய புகழ்பெற்ற நூலின் பெயர் என்ன?

(விடைகள் 70ஆம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி

**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**



SOURAA



NARAYANAMURTHY TATA

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவுசெப்டம்பர்2005இதழில் வெளியிடப்படும்.
**போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.**

## வாழ்த்துகள்!

## பரிசு பெற்றவை

**மே 2005 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :**

**விஜயலட்சுமி வெங்கடேசன்,**
**ப.எண்-2/408, புது.எண் 2/257,**
**முதல் தெரு, கற்பகாம்பாள் நகர்,**
**கொட்டிவாக்கம்,**
**சென்னை - 600 004.**



"படிக்கத் தெரியாவிட்டாலென்ன,
கேட்டுத் தெரிந்து கொள்ளலாமே;
கேட்க முடியாவிட்டாலென்ன,
படித்து அறிந்து கொள்ளலாமே."

## நம் இந்தியா - விடைகள் (பக்கம் 69)

1. ரோஹிணி-75, 1967ஆம் ஆண்டு நவம்பரில் தூம்பாவிலிருந்து செலுத்தப்பட்டது.
2. பாபா அடாமிக் ரீசர்ச் சென்டர், மும்பை.
3. கணித ஆராய்ச்சிக்கு பாஸ்கர் தன் மகளின் பெயரான 'லீலாவதி' என்று பெயரிட்டார்.
4. 9ஆம் நூற்றாண்டின் சமண கணித மேதை. நூலின் பெயர் 'கணித் சார் சங்கிரஹ்.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor: B. Viswanatha Reddi (Viswam)

# மின்சார சிக்கனம் வீடுகளுக்கு மட்டுமல்ல!



ஒருநாள் வீணாவும் அவள் தாயும் மார்க்கெட்டுக்குச் சென்றனர். வீணாவின் தந்தையுடைய அலுவலகம் மார்க்கெட் அருகிலேயே இருந்ததால், அங்கு முன் அறிவிப்பு எதுவுமின்றி சென்று, அவரை ஆச்சரியத்தில் ஆழ்த்த முடிவு செய்து, அவர்கள் இருவரும் அவருடைய அலுவலகத் திற்குச் சென்றனர். அவர்கள் சென்றிருந்த சமயம், வீணாவின் தந்தை அலுவலகத்தில் அவர் இருக்கையில் இல்லாததால், அவருடைய அறையிலேயே இருவரும் காத்திருந்தனர்.

தந்தையின் அலுவலக அறையைக் கண்ட வீணா ஆச்சரியமடைந்தாள். அவர் இருக்கையில் இல்லாமல் இருந்த போதிலும், அங்கு குளிர்சாதன இயந்திரமும், மின் விசிறிகளும், மின் விளக்கும் இயங்கிக் கொண்டிருந்தன.

சற்றுநேரத்தில் தன் இருக்கைக்குத் திரும்பிய வீணாவின் தந்தை, இருவரையும் தன் அறையில் பார்த்து ஆச்சரியமடைந்தார். அவரைக் கண்டதும் வீணா, ''அப்பா! வீட்டில் இருக்கும்போது நீங்கள் மின் விசிறியும், மின் விளக்குகளும் தேவையற்ற சமயத்தில் வீணாக இயங்கக் கூடாது என்று எங்களுக்கு அறிவுரை கூறுவீர்களே! அந்த அறிவுரை வீடுகளுக்கு மட்டும்தான் பொருந்துமா? உங்கள் அலுவலக அறையில் நீங்கள் இல்லாதபோது குளிர்சாதன இயந்திரம், மின் விசிறிகள், மின் விளக்குகள் ஆகியவை ஏன் இயங்கிக் கொண்டேயிருக்கின்றன? மின்சாரக் கட்டணம் நீங்கள் செலுத்துவதில்லை எனபதாலா?'' என்று கேள்விக்கனைகளை எடுத்து வீசினாள்.

வீணாவின் வார்த்தைகள் அவருடைய தந்தையை 'சுருக்'கென தைத்தன. 'ஆகா! இவளுக்குத் தோன்றுவது நமக்குத் தோன்றவில்லையே!' என்று வெட்கிய அவர், ''என் தவறை எடுத்துணர்த்திய உனக்கு மிகவும் நன்றி வீணா!'' என்றவர் தொடர்ந்து, ''இனிமேல் மின்சார உபகரணங்களை வீணாக இயங்க விடமாட்டேன்!''

